பக்கம்.

௩ தேயு. ... ௪௪—௪௫
௪ வாயு. .... ௪௫—௪௬
௫ ஆகாயம் .. ௪௮ ௪௯
காலம். ... ....௪௯—௫௦
௭ திக்கு ... ௫௦
௮ ஆன்மா .... ... ௫௦
௯ மனம். .. ௫௦ ௫௧
குணம். .... .. ௫௧
௧ உருவம். .. ௫௧
௨ இரசம். .. ..௫௧ ௫௨
௩ கந்தம். .. ௫௨
௪ பரிசம். ... . ௫௨
௫ சங்கியை. .... ௫௨—௫௩
௬ பரிமாணம் . ௫௩
௭ வேறுதல் .... ௫௩
௮ சையோகம் ..௫௩ ௫௪
௯ விபாகம் . ௫௪
௧௦ பரத்துவம். .... ௫௪
௧௧ அபரத்துவம் ௫௪—௫௫
௧௨ குருத்துவம் . ௫௫
௧௩ திரவத்துவம். ௫௫
௧௪ சிநேகம் . ௫௫
௧௫ சத்தம் .. ௫௫—௫௮
௧௬ புத்தி . ௫௮
௧௭ சுகம் .. ..... ௫௮
௧௮ துக்கம் .... ௫௮
௧௯ இராகம் . . ௫௮

பக்கம்

உ0 துவேஷம் .... ருஅ
உக பிரயத்நம் ... ருஅ
உ௨ தருமம். ... ருஅ
உ௩ அதருமம்.... ... ருஅ
உச சம்ஸ்காரம் .. ருகூ
க வேகம் .. ..
உ பாவனை ...
௩ ஸ்திதிஸ்தாபகம் ...
௩ கருமம் ... ரு
எழுதல் ... ரு
உ விழுதல். ... ருகூ — 0
௩ முடக்கல் . சா0
ச நீட்டல் .. சா0
ரு நடத்தல் .. சா0
ச சாமாந்யம் .... சா0
க பரம் .... ... சா0
உ அபரம் 0 சாக
ரு விசேடம். .... .... சாக
சா சமவாயம் சாக சாஉ
அபாவம் .... சாஉ சா௩
5 புத்தி .... சா௩
க அநுபவம் .... .... சா௩
க மெய்மை ....
உ பொய்மை..... ....
உ நினைவு ....
மெய்மை
உ பொய்மை ....

பக்கம்.

6 மாநம். .... ... ௰௪
7 பிரவிருத்தி. .... .... ௰௪
க தருமம். .... .... ௰௪
உ அதருமம். .... .... ௰௪
8 தோடம் .... .... ௰௪
க காமம். .. .... ௰௪
உ வெகுளி..... .... ௰௪
௩ மயக்கம் .... .... ௰௪
9 பிரேத்தியபாவம். .... ௰௪
10 பலம். ... ... .... ௰௫
11 துக்கம். ௰௫
12 அபவர்க்கம். .... ௰௫ ௰௬

௩ வது சமுசயம். ௰௬ ௰௭

௪ வது பிரயோசநம். ௰௭

௫ வது திட்டாந்தம் ௰௭

1 ஒத்ததருமிதிட்டாந்தம்.... ௰௭
2 வைதருமிதிட்டாந்தம் ௰௭

௬ வது சித்தாந்தம். ௰௭

1 சர்வதந்திரம் .... .... ௰௭
2 பிரதிதந்திரம். .... ௰௭
3 அதிகரணம் .... .... ௰௭
4 உபகம்பாடு. .... ... ௰௭ ௰௮

௭ வது அவயவம். ௰௮

1 பிரதிஞ்ஞை. .... .... ௰௮
2 எது .... ௰௮

பக்கம்


3 உதாரணம் .... சாஅ

4 உபநயம். .... சாஅ

5 நிகமநம். .... .... சாஅ

அவது தருக்கம். சாஅ சா

கூ வது நிர்ணயம். சாகூ

o வது வாதம். சாகூ

க வது சற்பம். சாகூ எo

கஉ வது வித டை எo

கங வது ஏத்துவாபாசம். எo

1 அசித்தம். .... .... எo எக

க ஆசிரயாசித்தம் ... எக எஉ

உ சொரூபாசித்தம் எஉ

க விசேடணாசித்தம் .. எஉ எங

உ விசேடியாசித்தம் .... எங

ங அசமர்த்தவிசே ணாசித்தம் எங

ச அசமர்த்தவிசேடியாசித்தம். எங-எச

ங வியாப்பியத்துவாசித்தம். .... எ

க சாத்தியத்துடனேயுடனிக
ழ்ச்சியில்லாதது .. எச

உ சோபாதி சம்பந்தி எச எரு

1 விருத்தம் .... .. எரு எசா

2 அநைகாந்திகம் .... எசா

க சாதாரணஅ நகாந்தி ம்

உ அசாதாரணஅநை ாந்திகம்

3 பிரகரணசமம் .... .... எஎ

4 காலாத்தியயாபதிட்டம் எஎ எஅ

பக்கம்.

சு வது சலம். எகூ

கரு வது சாதி. எகூ

1 உற்கருஷம் .. ..

௨ அபகருஷம் ..

கூ வது நிக்கிரகத்தானம். அ0

# தர்க்கபாஷை

நியாயநூற்பிரவேசஞ் சுருங்கிய கேள்வியினாலடைதலை மடியனையும் வாஞ்சிக்கின்ற பாலனெவன் அவனுக்கு யுத்திபரிமித தர்க்கபாஷையை, யான் சுருக்கி விளக்குகின்றேன்.

பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோசநம், திட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தருக்கம், நிண்ணயம், வாதம், சற்பம், விதண்டை, ஏத்துவாபாசம், சலம், சாதி, நிக்கிரகத்தாநங்களது தத்துவஞாநத்தால் உயர்சிறப்படைப.*

---

* உயர்சிறப்படைதலென்பது வீடடைதல். பிரமாணாதிகளுடைய மெய்ம்மையறிவினான் மித்தியாஞாநமாகிய பொய்ம்மையறிவகலும்-அஃதகல, அதுகாரணமாகப் பிறக்குங் காம வெகுளி மயக்கங்களாகிய தோஷங்களும்-அஃதகல, அதன் காரியமாகப் பிறக்கும் புண்ணியபாவங்களாகிய பிரவிருத்தியகலும்-அஃதகல, அதன் காரியமாகிய பிறப்பகலும் அஃதகலுங்கால் அதனோடுநிகழுந் துக்கமகலும்-அத் துக்கத்தினது ஒழிவே நிச்சிரேயசமென்றும் அபவர்க்கமென்றுஞ்சொல்லப்படுகிற மோட்சம் என்னுங் கௌதமர் கருத்தைச் சார்ந்தவராய் நமது தார்க்கிகர் பிரமாணாதி பதினாறு பதார்த்தங்களை துண்மையறிவால்வீடடைதலுளதாமென்று கூறினரெனக்கொள்க. தர்க்கம் வழுவறக் கற்று, அதன் பிரமாணங்களைத் துணைக்கொள்வானொருவன், ஆராயுங்கால் மெய்யிதுபொய்யிதுவென்றறி

உத்தே°
இலக்கண°
பரீட்சை.

இது ஙியாயத்தினது முதற்சூத்திரம். இதன்பொருள், பிரமாண முதற் பதினாறுபொருளதுண்மையறிவால் வீடடைதலுளதாமென்பது

எவ்வளவும் பிரமாணமுதலியவற்றி னுத்தேச இலக்கண பரீட்சை பண்ணப்படாது, அவ்வளவு மவற்றினுண்மையறி வுண்டாகாது' எ ˙ஙனம்? பாஷியகாரர் கூறினார் அங்ஙனம் இந்நூலது பிரவிருத்தி உத்தேசமும், இலக்கணமும், பரீட்சையுமென மூன்றுவகைத்து

-த்தேசமாவது பெயர்மாத்திரையாற் பொருளைச் சொல்வது அதுவு மிச்சூத்திரத்தானே பெறப்படும்

இலக்கணமாவது சிறப்பியல்பு எங்ஙனமெனின், ஆவிற்குத் தாடி முதலிய உடைமை.

இலக்கியத்திற் கிலக்கணம் பொருந்துமோ பொருந்தாதோவென் றாராய்தல் பரீட்சை

ஆதலின் இவ்விலக்கண பரீட்சைகள் பிரமா

---

வான் கடவுள் அருளியவேதம் யாது, கையர் இயற்றிய நூல் யாதெனறறிவான் ஒன்றேனும்பொய்ம்மைமொழிபுகலு மாகமமானது மற்றெப்பரிசினுஞ் சாமர்த்தியகாரியமாயினுந் திவ்விய யோக்கியமுடையத ˙ று, மனுடசிருட்டியாதல் வேண்டுமென்றறிவான் இவ்வகைபுரிதலறம் இவ்வ கபுரிதல் மறம் என்றறிவான்; ஆதலால், தர்க்கவித்தியை வீட்டைதற்கு வழியாகுமென ஒருபடித்தா எரும் கொளளற்பாற்று

ஞாதிகளுடைய உண்மையறிவின்பொருட்டவசியம் வேண்டின. அவற்றுள்ளு முதற்கணுத்தேசித்த பி ரமாணத்திற்கிலக்கண முறையே கூறப்படும்.

## க பிரமாணம.

பிரமைக்குக் கரணம் பிரமாணம் இதிற் பிரமா ண மிலக்கியம், பிரமாகரணத்தன்மை யிலக்கணம்.

அற்றாயிற், பிரமாணம் பிரமைக்குக் கரணமாயி னதற்குப் பலங் கூறல்வேண்டும்; கரணத்திற்குப் பலமுடைமை நியமமாதலின் அஃதொக்கும்; அத ற்குப் பிரமையே பலம் பலமாவது சாதித்தல் து ணித்தற் கருவியாகிய நவியத்திற்குத் துணித்தலே பலம்

பிரமை. பிரமாணத்திற்குக் கரணமாகக் கூறப்ப ட்ட பிரமையாவது யாது? யதார்த்த அ நுபவம் பிரமை; யதார்த்தமென்றது அயதார்த்த மாகிய ஐயத்திரிவு தருக்க உணர்வுகட்கு விலக்கு. அநுபவம் என்றது*ஸ்மிருதிக்கு விலக்கு. அது ஸ்மிருதிக்கு வேறாகிய உணர்வு

ர ம. கரணமாவதுயாது? சாதகதமங் கரணம் உயர்ந்த சாதகஞ்சாதகதமம் உயர்ந்த கா ரணமென்பதேயிதன்பொருள். சாதகங் காரணம் என்பன ஒருபொருட் சொற்கள்.

ரண. ரணமாவதியாதெனிற் கூறுதும் நிய தமாய்ப் பிறிதொன்றற் றதலின்றிக் காரி யத்திற்கு முன்னிற்றலுடையது யாது அது கார ணம்; ஆடைக்கு நூலுடா முதலியன போல்வ ஆ

*ஸ்மிருதி-நினைவு

டை தோன்றுழித் தன்னியல்பின்வந்த கழுதைமுதலியவற்றிற்கு முன்னிற்றலுண்டேயாயினும், அது நியமமன்று. நூலுருவிற்கு நியதமாய் முன்னிற்றலுண்டேயெனின், அது பிறிதொன்றற்காகும்; ஆடையுருத் தோற்றத்தமைதலின். ஆடையைக்குறித்துங் காரணமெனிற் றபனை பெருகும். ஆதலிற் பிறிதொன்றற்காகாமையாய் நியதமாய் முன்னிற்பதன்றன்மை காரணத்தன்மை. பிறிதொன்றற்காகாது நியதமாய்ப் பின்னிற்பதன் றன்மை காரியத்தன்மை.

ஒருவன், காரியத்தா(°ல தொடரப்பட்ட அந்நுவய வியதிரேகி காரணமென்றான். அது பொருந்தாது; நித்தியவிபுவாய வான் முதலியவற்றிற்குக் காலத்தானு மிடத்தானும் வியதிரேகமின்மையிற் காரணமன்மைவரவேண்டுதலின்.

மவாயி ர ‧ ‧

காரணமுஞ் சமவாயி, அசமவாயி, நிமித்தமெ னுங் கூறுபாட்டான்மூவகைப்படும். அவற்றுள், எதன்கட் சமவேதித்துக் காரியந்தோன்றும், அது சமவாயிகாரணம் எங்ஙனம்? நூல்க ளாடைக்குச் சமவாயிகாரணம் நூலின்கண்ணே யாடைசமவேதித்துத் தோன்றும் நாடாமுதலியவற்றினில்லை.

அற்றாயின், ஆடைக்கு நூலோடும் நாடாமுதலியவற்றோடுஞ் சம்பந்தமுளதாக, நூலின்கண்ணே யாடை சமவேதித்துத் தோன்றல்—நாடா முதலியவற்றின்கணில்லையென்பதெங்ஙனம்? அஃதொக்கும்; அச்சம்பந்தம், சையோகமுஞ் சமவாயமு

மென இருவகைப்படும். அவற்றுள், நீக்கமின்றியி
ருப்பவற்றின் சம்பந்தம், சமவாயம்; ஏனையவற்றது
சையோகமே. நீக்கமின்றியிருப்பனயாவை? எவற்று
ளொன்று நசியாததாய் மற்றொன்றைப் பற்றியே
நிற்கும், அவை நீக்கமின்றியிருப்பன. எங்ஙனம்?
அவயவாவயவிகள், குணகுணிகள், வினைவினையது-
ள், சாதிவியத்திகள், விசேட நித்தியத் திரவியங்க
ளென்பனவே. அவயவி முதலியன முறையே கெ
டாதனவாய அவயவ முதலியவற்றைப் பற்றியே
நிற்கும்; கெடுமவத்தையிற் பற்றாமையே நிற்கும்
எங்ஙனம்? நூலதுகேட்டின் ஆடையும் *ஆசிரயத்
ததுகேட்டிற் குறையும். கெடுதற்றன்மையாவது
கெடுதற்காரணக் கூட்டங்கூடுதல். நூலாடைகளு
ம் அவயவாவயவிகளாதலின், அவற்றது சம்பந்தஞ்
சமவாயம்; நீக்கமின்றியிருத்தலின். நாடா ஆடை
கட்காயிற் சமவாயமின்று; நீக்கமின்றியிருத்தலி
ன்மையின். நாடா ஆடையைப்பற்றி நிற்றலும் இ
ன்று. ஆடை நாடாவைப்பற்றி நிற்றலும் இன்று.
ஆதலின் அவற்றது சம்பந்தஞ் சையோகமே.
ஆதலின், இங்ஙன மாடை நூலிற் சமவேதம். எத
னகட்சமவேதித்துக் காரியந்தோன்றும், அது சம
வாயிகாரணம், ஆதலின், நூல்களே யாடைக்குச் ச
மவாயிகாரணம்; நாடாமுதலியன அல்ல ஆடை யுந்
தற்புணருருவமுதலியவற்றிற்குச் சமவாயிகாரண
ம். இங்ஙன மட்பிண்ட முங் குடத்திற்குச் சமவாயி
காரணம். குடமுந் தற்புணருருவமுதலியவற்றி
ற்குச் சமவாயிகாரணம்.

அற்றாயின், எப்பொழுது குடமுதலியன தோ றும் அப்பொழுதே தற்புணருருவமுதலியனவுந் தோன்றும் ஆதலின் ஒருகாலத்திற் றோன்றின ஆதலிற் குணகுணிகட் கிடவலக்கோடுபோலக் காரிய காரணத்தன்மையேயில்லை முற்பிற்பாடின் மையின் ஆதலிற் குடந் தற்புணருருவமுதலியவ ற்றிற்குச் சமவாயிகாரணமன்று சமவாயிகாரண ங் காரணவிசேடமாதலின் எனிற் கூறுதும்.

குணகுணிகட் கொருகாலத் தோற்றமின்று. ஆ யின், திரவியங் குணமிலியாயே முற்றோன்றும்; பின் அதிற் சமவேதித்துக் குணங்கடோன்றும். ஒருகா லத்தோற்றமாயிற் குணகுணிகட்கு, ஒரு காரணக் கூட்டத்தனவாதலில் வேறுபாடில்லாதல் வேண்டு ம்;காரியவேறுபாடு காரணவேறுபாட்டி னியதமாத லின் ஆதலின் முற்கணத்திற் குணமிலியேயாய குட ங் குணங்கட்கு முன்னிற்பது. திரவியங் குணங்க ட்குச் சமவாயிகாரணமாம் அப்பொழுது காரண வேறுபாடுமுண்டு. குடங் குடத்தைக் குறித்துக் காரணமன்மற; ஒன்றற்கே முற்பிற்பாடின் மயின் குடந் தானே தன்னைக்குறித்து முன்னிற்பதும் பி னிற்பதுமில்லை. தன் குணங்களைக்குறித்து முன் னிற்றலின், திரவியங் குணங்கட்குச் சமவாயிகார ணமாம்

அற்றாயின், இங்ஙனமாயின் குட முற்கணத்திற் ட்புலமின்மையாதல்வேண்டும் அருவத்திரவியத் துவமாதலில்; காற்றுப்போல எத்திரவியம் பரிதா உற்பூதவுருவமுடையது, அத்திரவியங் ட்புலப்ப டுவது: திரவியமன்மையுமாதல்வேண்டும்; குணத்

திற்கிடனுதற்றன்மையின்மையின் குணத்திற்கிட னுவது திரவியமென்பது திரவிய இலக்கணம் அஃதொக்கும்; மிகவு நுண்ணிய குணம் முதற்கணத் திற் கட்புலனுற் கிரகிக்கப்படாதாயி r அப்பொழு து நமக் கிடையூறியாது? ஆதலின் முன்னர்க் கு ணமிலியாயே குடந் தோன்றுமென்னும் இது து ணிவு. இரண்டு முதலிய கணங்களிற் கட்புலனுற் ரஙிக்கப்படும். முற்கணத்திற் குணத்திற்கிடனுதற் றன்மையின்மையிற்றிரவியமன்மையாதலில்லை; சம வாயிகாரணந் திரவியமென்னுந் திரவிய லக்கணப் பொருத்தத்தால் யோக்கியதையாற் குணத்திற்கிட னுமாதலின் *

* நமது தார்க்கிகர் கடுந் திடரினு நுழைந்து உ ண்மறைந்துகிடக்குந் திரவியங்களைக் கவருகிற நிபு ணமுந் தீ சணமுமுடையவரேனுஞ் சிறுபான் ம வழுவுவது நூதநமன்று முன்னர்க் குணமிலியா யே திரவியந் தோன்றும், அதினின்று குணந்தோ றுமென்னுமிது நமக்குத் துணிவன்று இவ்வா சிரியர் தாமே சொல்லுகிறபடி திரவியமென்பது குணத்திற்கிடனுதலென்னு மிலக்கணமுடையது, குணத்திற்கிடனுவதாந் தன் ம முற்கணத்தினில தாயின் அக்கணத்தில் அதைத் திரவியமென்று கொள்வதெங்ஙன் ?

திரவியமென்ப துளதாயதொன்று. உளதென் று சொல்லற்பாலது யாதுயாது, அதுஅது யாதே னுமோர் தன்மையினுளதாகவேண்டும் த மையி னறியும் திரவியமுளதாமென்பது அநர்த்தக வாக் கியமாம் எங்ஙனமெனின் திரவியமீண்டுளதென வே, அத்திரவியம் பெரியதேனுஞ் சிறியதேனும்,

**அசமவாயி காரணம்** யாது சமவாயிகாரணத் தணுகியிருப் பதுந் துணிந்த காரணத்தன்மை யுடை யதுமாயிருப்பது, அஃதசமவாயிகாரண மென்று கூறப்படும். எங்ஙனம்? ஆடைக்கு நூலிழையே சமவாயிகாரணம்; நூலிழையாகிய குண மாடைச் சமவாயிகாரணமும் குணியுமாகிய நூல்களி லே சமவேதித்திருத்தலின், சமவாயிகாரணத்தணி த்தாயிருத்தலின் பிறிதொன்றிற்காகாமையு நியதி யுமாகிய முன்னிற்றற்றன்மையால் ஆடையைக்குறி த்துங் காரணமாதலின். இங்ஙனம், நூலுருவமு மாடையையடைந்த உருவிற் கசமவாயிகாரணம்.

அற்றாயின், ஆடையுருவிற் காடை சமவாயிகார ணம்; ஆதலின், தன்னையடைந்தேயிருக்கின்ற ஒரு தருமத்திற் காடையுருவைக்குறித் தசமவாயிகார ணத்தன்மை கூறந்தகும்; சமவாயிகாரணத்தணித் தாயிருத்தலின்: நூலுருவிற்குத் தகுதியன்று, அத ற்குச் சமவாயிகாரணத் தணித்தாயிருத்த லின்மை யின்; இங்ஙனமன்று; சமவாயிகாரணத்தின் சமவா

---

ஆனதாக, அணுத்துணையேனும் மேருத்துணையே னும் ஓரிடத்தைக்கதுவவேண்டுமே அப்பொருள் கண்ணுக்குத் தோன்றுவதாயின், உருவத்தன்மை யுடையதாயும், தோன்றாதாயின் அருவத்தன்மையு டையதாயும் இருக்கவேண்டுமே; இவைபோல்வன வற்றால் திரவியமுளதென்றறியுங்கால் அஃது இ ன்ன இன்ன பரிசாய் இருக்கின்றதென்றறியும் அ றிவுவிடயமே தன்மை. இத்தன்மையே குணம் ஆதலால் குணமென்பது, தானே திரவியமாகாது, தான் திரவியத்தினின்று பிறிதொன்றாகாதாய்த்

யிகாரணத் தனித்தாயிருத்தலும் பரம்பரையாய்ச்
சமவாயிகாரணத் தனித்தாயிருத்தலின்

றாமொன்று சமவாயிகாரணமு
நிமித்தகாரணம். ம் அசமவாயிகாரணமுமன்றாய் மற்
றுங் காரணமாம், அது நிமித்தகார
ணமென்று கூறப்படும். எங்ஙனம்? நாடாமுதலியன
ஆடைக்கு நிமித்தகாரணம்.

இக் காரணங்கண்மூன்று முளபொருளுக்கே. இல்பொருட்காயின, நிமித்தகாரணமாத்திரம்; அதற்கோரிடத்துஞ் சமவாயமின்மையின், சமவாய மு

---

திரவியத்தைத் திரக்கின்றவரது உள்ளத்தேயுத்தியினாற் பகுக்கப்பட்டுப் பிறர்க்குபயோகமாகற்பொருட்டுப் பெயர்பிறித்து கொடுக்கப்பட்டுக் கிடக்கும் மனோசிருட்டியென்றுகொள்க.

குணமென்பதை மனோசிருட்டியாகக் கொண்டு, மரத்தின்கண்ணே இருந்த குணத்திற்குத் திரவியத்தின்கண்ணே சமவாயந் தோன்றிற்று. ஆதலால் திரவியந் தோன்றுங்காற் குணந் தோன்றியதில்லை யென்று சொல்லின் ஒருவாறு பொருந்தும், எங்ஙனமெனின் குடமென்பது தோன்றியபின், அதினின்றுவங் குடத்தினின்று மெழுந்து கட்பொறியினிகழ்ந்த கதிர்களாற் கிரகிக்கப்படுவதாதலின் அக்கதிர்ச் சொரூபமாகிய உருவமே குடத்தின் குணமாகக் காண்கின்றவனுடைய உள்ளத்திற் கொளக்கப்படுவதால், அக்குணம் குடத்தின் சமவேதமென்றும் அதற்குக் குடஞ் சமவாயமென்றும் குடந் தோன்றியபோது குணந்தோன்றவில்லை யென்றும் சொல்வதமையும். ஆயினும், இவ்வாசிரியரிக்கருத்துப்பற்றிக் கூறினாரென்று நாஞ் சொல்லவொல்லோம்.

ளபொருளிரண்டின் றருடமாதலின், இக் காரணங்கள் மூன்றினுள் யாதாயினு மெவ்வாற்றானு முயருமாயின், அதுவே கரணம்.

ஆதலின் பிரமைக்குக்கரணம் பிரமாணமென்னு மிவ்விலக்கணந் துணியப்படும்.

உணரப்படாத பொருளின துணர்வு பிரமாணமென்பது பிரமாண இலக்கணமெனின் அஃதன்று; ஒரு குடத்தின்கண்ணே குடமிது குடமிதுவென்றுணரப்பட்டதை யுணருந் தாரைகொளுணர்வுகட்கப்பிராமாண்யம் வரவேண்டுதலின். வேறுவேறாகிய கணவிசேடத்தோடு கூடிய பொருட்கவர்ச்சியா னுணரப்படாத பொருளின துணர்தற்றன்மையுண்டென்பதன்று; காட்சியானுண்ணிய கால வேறுபாட்டினது தெரியாமையின். வேறுபாடு தெரியின் கிரியைமுதற் சையோகமீறாய நான்கிற்கும் ஒருமை யபிமான மின்றாதல் வேண்டும். பிரமாதாருப்பிரமேய முதலிய பல காரணங்கள் பிரமைக்குள. இவையெல்லாங் கரணமோ அல்லதல்லவோ கூறுதும். பிரமாதாவும் பிரமேயமு மிருப்பினும் பிரமை பிறவாமையினானும் இந்திரியார்த்த சையோகாதி யுண்டாயின் விரைவினிற் பிரமை பிறத்தலினானும், இந்திரியார்த்த சையோகாதியே கரணம். சாதகத்தன்மை விசேஷமின்றாயினும் இவ்வுயர்ச்சியானே யிதற்குப் பிரமாதா முதலியவற்றினின்று மதிசயமாதலின், உயர்ந்த காரணங் கரணமென்று கூறப்பட்டது இந்திரியார்த்த சையோகாதியே பிரமைக்குக் கரணமாதலிற் பிரமாணம்; பிரமாதா முதலியன அல்ல, அப்பிரமாணங்களென்க.

அங்ஙன நியாயசூத்திரம் பிரத்தியட்ச அநுமான உபமான சப்தங்கள் பிரமாணங்கள்.

1. பிரத்தியட்சம்.

காட்சியாவது யாது? சாட்சாற்காரிப் பிரமைக்குக் கரணம் பிரத்தியட்சம். யா திந்திரியத்தாற் றோன்றும், அது, சாட்சாற்காரிப்பிரமை. அஃதுஞ் சவிகற்ப நிருவிகற்பக் கூறுபாட்டால், இருவகைப்படும். அதற்குக் கரணமூவகை; ஓரிடத் திந்திரியம், ஓரிடத்துப் பொருளிந்திரியக் கூட்டம், ஓரிடத்து ஞானம்.

எவ்விடத் திந்திரியங் கரணம்? எப்போது நிருவிகற்ப வுருவப் பிரமை பலமாம், அப்போ திந்திரியங் கரணம். அவ்வாறே உயிர் மனத்தோடு கூடும்; மன மிந்திரியத்தோடு; இந்திரியம் பொருளோடு; இந்திரியங்கள் கடைந்ததை விளக்குந்தன்மை நியமமாதலின். ஆதலிற் பொருளோடு கூடிய இந்திரியத்தாற் பெயர் சாதி முதலியவையில்லாத பொருண்மாத்திர மகப்படுக்கு நிருவிகற்ப ஞானந் தோன்றும். அந்த ஞானத்திற் கிந்திரியங் கரணம் துணித்தற்கு நவியம் போல; இந்திரியார்த்தக் கூட்டம வாந்தர வியாபாரம். துணித்தற்க நவியாகிய நவியத்திற்கு மரத்தோடு கூட்டம் போல; நிருவிகற்ப ஞானம் பலம்; நவியத்திற்குத் துணித்தல் போல.

எவ்விடத்துப் பொருளிந்திரியக் கூட்டங் கரணம்? எப்போது, நிருவிகற்பத்தின் பின்னர் பெயர் சாதி முதலியவையுள்ள, சாத்தனிவன், பார்ப்பானிவன், கரியனிவன் என்னும் விசேடண விசேடியத் தன்மை அகப்படுக்குஞ் சவிகற்ப ஞானந் தோன்று

ம், அப்போது பொருளிந்திரியக் கூட்டங் கரணம்; நிருவிகற்பமே, அவாந்தர வியாபாரம், சவிகற்ப ஞானம் பலம்

எவ்விடத்து ஞானங் கரணம்? எப்போது, கூறப்பட்ட சவிகற்பத்தின் பின்னர் வெறுப்பு புத்தி விழைவுபேட்சைகடோன்றும், அப்போது நிருவிகற்பஞானங் கரணம்; சவிகற்பமவாந்தர வியாபாரம்; வெறுப்பு முதலிய புத்திகள் பலம்

சவிகற்பமுதலியவற்றிற்கு மிந்திரியமே கரணமென்பாருமுளர்

நடுவு தோன்றியனவாகிய சந்நிகர்ஷ முதலியனவெவ்வளவோ அவையனைத்தும் அவாந்தர வியாபாரம்.

அறுவகைச் சந்நிகர்ஷம் பொருளிந்திரியங்களுடைய சாற்கிரிப் பிரமைக்கு எதுவாகிய சந்நிகர்ஷம்* யாது, அஃது அறுவகையே. அவை சையோகம், சயுத்தசமவாயம், சையுத்தசமவேதசமவாயம், சமவாயம், சமவேதசமவாயம், விசேடண விசேடிய பாவமென்பனவே

எப்போது சையோக சந்நிகர்ஷம்? எப்போது கண்ணாற் குடமிதுவென்று குடவிடயஞானந் தோன்றும், அப்போது கண்ணிந்திரியம், குடம் பொருள், அவற்றது சந்நிகர்ஷஞ் சையோகமே; நீக்கமின்மையிருத்தலின்மையின் இங்ஙனமனமென்னு மகவிந்திரியத்தால், எப்போ தான்மவிடய ஞானநானென்று தோன்றும். அப்போது மநஇந்திரியம்; ஆன்

மா பொருள்; அவற்றது சந்நிகர்ஷஞ் சையோகமே

எப்போது சையுக்தசமவாய சந்நிகர்ஷம்? எப்போது கண்முதலியவற்றாற் குடமடையுருவமுதலியவை, குடத்தின்கணுருவமுண்டென்று கிரகிக்கப்படும், அப்போது கண்ணிந்திரியம்; குடமடையுருவமுதலியவை பொருள்; அவற்றினது சந்நிகர்ஷஞ் சையுக்தசமவாயமே. கண்ணோடு சையுக்தமான குடத்தில், உருவிற்குச் சமவாயமாதலி. இங்ஙன மனத்தால் ஆன்ம சமவேதமாகிய இன்பமுதலியவை கிரகிக்கப்படும்போது மிச் சந்நிகர்ஷமே. குடமடைபரிமாணமுதலியவற்றின் கிரகிப்பி னான்குவகைச் சந்நிகர்ஷமு மிக்ககாரணமென்று வேண்டப்படும்; சையுக்தசமவாய முண்டாயினும், அஃதில்லாதபோது, சேய்மைக்கட் பரிமாண முதலியன கிரகிக்கப்படாமையின். நான்குவகைச் சந்நிகர்ஷமெங்ஙனம்? அவை: இந்திரிய வவயவங்களோடு பொருளவயவங்கட்கு, இந்திரிய வவயவிகளோடு பொருளவயவிகட்கு இந்திரிய வவயவங்களோடு பொருளவயவிகட்கு, இந்திரிய வவயவிகளோடு பொருளவயவங்கட்காய சந்நிகர்ஷங்கள்

எப்போது சையுக்தசமவேத சமவாய சந்நிகர்ஷம்? எப்போது கண்முதலியவற்றாற் குடவுருவிற் சமவேதமான உருவத்தன்மைமுதலிய சாமானிய ஞானங் கவரப்படும், அபபோது கண்ணிந்திரியம்; உருவத்தன்மை முதலிய சாமானியம் பொருள். அவற்றது சந்நிகர்ஷஞ் சையுக்தசமவேத சமவாயமே. எங்ஙனம்? கண்ணோடு சையுக்தமான குடத்திலு

ருவஞ் சமவேதம்' அதன்கண், உருவத்தன்மைக்குச் சமவாயமாதலின்.

எப்போது சமவாயசந்நிகர்ஷம்? எப்போது செவிப்புலனால் இது ககாரமென்றோசை கிரகிக்கப்படும், அப்போது செவி, இந்திரியம்; ஓசை பொருள்; அவற்றினது சந்நிகர்ஷஞ் சமவாயமே; செவிக்கு வான்வடிவமுண்மையின், ஓசைக்கு வான்குணத்தன்மையுண்மையின், குணகுணிகட்குச் சமவாயமாதலின்.

எப்போது சமவேதசமவாய சந்நிகர்ஷம்? எப்போது செவியிற் சமவேதமான ஓசையில் ஓசைத்தன்மை முதலிய சாமாநியஞ் சுரோத்திரத்தாற் கவரப்படும், அப்போது செவி இந்திரியம்; ஓசைத்தன்மைமுதலிய சாமாநியம், பொருள்' அவற்றினது சந்நிகர்ஷஞ் சமவேதசமவாயம்; செவியிற் சமவேதமான ஓசையில் ஓசைத்தன்மைக்குச் சமவாயமாதலின்

எப்போது விசேடண விசேடிய பாவப் பொருளிந்திரியச் சந்நிகர்ஷம்? எப்போது கண்ணோடுசையுத்தமான நிலத்திற் குடமில்லென்று குடமுதலியவற்றின்மை கிரகிக்கப்படும் அப்போது கண்ணோடு சையுக்தமான நிலத்திற்குக் குடமுதலியவற்றின்மை விசேடியம் குடமில்லது நிலமென்னுமிடத்துக் கண்ணோடு கூடிய நிலத்திற் குடமுதலியவற்றின்மை விசேடணம், எப்போது மனத்தோடு சையுத்தமான ஆன்மாவின் கண்ணிடத் திண்பமில்லென்று சுகமுதலியவற்றின்மை கிரகிக்கப்படும், அப்போது மனத்தோடு சையுக்தமான ஆன்மாவுக்

கின்பமுதலியவற்றின்மை விசேடியம். இன்பமில்லை யென்னுமிடத் தின்பமின்மை விசேடணம் எப்போது செவியிற் சமவேதமான ககாரத்திற் சகாரத்தன்மையில்லென்று கிரகிக்கப்படும், அப்போது செவியிற் சமவேதமான ககாரத்திற்குச் சகாரத்தன்மையின்மை விசேடியம். சகாரத்தன்மையில்லது ககாரமென்புழிச் சுரோத்திரசமவேதமான ககாரத்திற்குச் சகாரத்தன்மையின்மை விசேடணமாதலில்

இங்ஙனஞ் சுருக்கத்தாற் கூறுதும் ஐவகைச் சம்பந்தத்தின் சம்பந்தியினது விசேடண விசேடியபாவலக்கணமான பொருளிந்திரிய சந்நிகர்ஷத்தால் இன்மை கிரகிக்கப்படுமே. இங்ஙனம் சமவாயமும்; கண்ணோடு சையுத்தமான நூலிற்கு விசேடியமான ஆடை சமவாயம் இந்நூல்களிலே ஆடை சமவாயமென்று கிரகிக்கப்படும். இங்ஙனம் அறுவகைச்சந்நிகர்ஷங் கூறப்பட்டன



சங்கிரகமாகவுங் கூறுதும். இந்திரியத் தோற்றப்பிரமை, விகற்ப நிருவிகற்பமென இருபாற்று. ஆங்கதற்குக் கரண மூன்று சந்நிகர்ஷமாறு

அற்றாயின், நிருவிகற்ப மெய்யாகிய தன்னிலக்கணவிடயத்தன்மையாற் காட்சியாக, உரையுமிழிங் மும்போல அநுகதாகாரத்தை அகப்படுத்தலிற் சாமாநிய விடயமான சவிகற்பம், எங்ஙனங் காட்சி? பொருளிற்றோன்றியதற்கே காட்சித்தன்மையாதலின், பொருளுமெய்ம்மையுண்டாயேபிறப்பிப்

பதாதலின், தன்னிலக்கண மெய்ம்மையுண்டாயது சாமாநியமன்று; பிரமாணத்தாற் றள்ளப்பட்ட ண் மயுடைய பிறிதுநீக்கவடிவான அதற்குப் பொய்ம்மையுண்டாதலின்; இங்ஙனமன்று, சாமாநியத்திற்கும் பொருளாந்தன்மை உண்மையின் இங்ஙனம் பிரத்தியட்சங் கூறப்பட்டது.



## 2. அநுமாநம்.

இலிங்கபராமரிசம் அநுமாநம். யாதினலநுமாநிக்கப்படும் அஃதநுமாநம் இலிங்க பராமரிசத்தானே பொருளநுமிக்கப்படும் ஆதலின் இலிங்கபராமரிச மநுமாநம் அது புகைமுதலிய ஞாநம்; அநுமிதியைக் குறித்துக் காரணமாதலின் தீமுதலிய ஞாநமநுமிதி; அதன் கரணம்புகைமுதலியஞாநம்

இலிங்கம் யாது? அதனது பராமரிசம் யாது? கூறுதும் வியாத்திவ த்தாற் பொருளையுணர்த்துவ திலிங்கம். எங்ஙனம்? புகை தீக் கிலிங்கம் அ ஙனமன்றே யாண்டுப்புகை ஆண்டுத்தீயென்னுமுடனிகழ்ச்சி நியமம் வியாத்தி அது கிரகிக்கப்படுங் காலே புகை தியை யுணர்த்தும் ஆதலின் வியா திவலத்தாற் றீயநுமாபகமாதலிற் புகை தீக் லிங் கம், அதனது மூன்றுஞாநம் இலிங்க பராமரிசம். அ ஙனமன்றே முன்னே அட்டின முதலியவற்றின் மறித்து மறித்தும் புகைகண்டு தீக்காணுகின்றுன் அம்மறித்துக்காண்டலாற் புகை தீக்களது தன்னியல்பான சம்பந்தம், யாண்டுப்புகை ஆண்டுத்தீயென்று துணியாநின்றுன்

யாண்டு யாண்டு மித்திரைமகன்மை ஆண்டாண்டுக்கருமையென்ப தொக்கும் ஆயினும், மித்திரைமகன்மை கருமைக்குத் தன்னியற்கைச் சம்பந்தமின்று, மற்றென்னெனின் ஔபாதிகமே; அடகு முதலிய உணவுப்பரிணாமமான பாதியுண்மையின். அங்ஙனமன்றோ, கருமையின் மித்திரைமகன்மை பிரயோசகமன்று, மற்றென்னெனின், அடகு முதலிய உணவுப் பரிணதி வேறுபாடே பிரயோசகம் பிரயோசகமுமுபாதியென்று கூறப்படும் புகை தீக்களது சம்பந்தத்தில் ஒருபாதியுமின்று; தகுதியல்லது சந்நிக்கப்பொருட்டருமையாதலின், தகுதியது காணப்படாமையின். யாண்டுபாதியுண்டு ஆண்டுக் காணப்படும், எங்ஙனம்? தீக்குப் புகையொடு சம்பந்தத்தில், ஈரவிறகின் கூட்டமுபாதி; கொலைமைக் கதன்சாதநத்தோடு கூடிய சம்பந்தத்தில் நிஷித்தத்வமுபாதி மித்திரைமகன்மைக்குக் கருமை சம்பந்தத்தில் அடகு முதலிய உணவுப் பரிணதி வேறுபாடுபாதி, ஈண்டுப் புகைக்குத் தீயுடனிகழ்ச்சியில் ஒருபாதியுமின்று உண்டாயின், அப்போது நிலம்போலக் காணப்படும். ஆதலிற் காட்சியின்மையினில்லையென்னுந் தருக்கத்துணையுடைய உணர்வின்மையோடு கூடிய காட்சியானே உபாதியின்மை துணியப்படும். அங்ஙனமன்றோ உபாதியின்மையிற்றோன்றிய வாசனையோடுகூடிய மறித்துக்காண்டலிற் றோன்றிய வாசனையோடு கூடிய உடனிகழ்ச்சி கிரகிக்குங் காட்சியாலே புகை தீக்களது வியாத்தி துணியப்படும். ஆதலின் புகை தீக்களுக்குத் தன்னியற்கைச்

சாதநகம்; ஔபாதிகமன்று. தன்னியற்கைச் சம்பந்தம் வியாத்தியென்று கூறப்படும்.

ஆதலின் இந்நியாயத்தாற் புகை தீக்களது வியாத்தி கிரகிக்கப்படுகையின் அட்டிலிற் புகைஞானம் யாது? அது முதலது; மலைமுதலிய பக்கத்திற் புகை ஞானம் யாது? அது இரண்டாவது. பிற்பாடு முன் கிரகிக்கப்பட்டதாகிய புகை தீக்களது வியாத்தியை நினைத், தம்மலையின்கண்ணே பின்னர்ப் புகையைப் பராமரிக்கின்றான், இம்மலையிற் றீயால் வியாத்தமான புகையுண்டென்று. இப் புகை ஞானமூன்றாவது. இஃதவசியம் வேண்டப்பட்டது வேறாயின், யாண்டுப்புகை யாண்டுத்தீயுண்டாக வண்டுத்தீயிருத்தலெங்ஙனம்? ஆதலினீண்டுப் புகையுண்டென்னு ஞானம் வேண்டப்படும். இதுவே யிலிங்கபராமரிசம். அதுவும், அநுமிதியைக் குறித்தாக் கரணமாதலின், அநுமானம். அதனை யிம்மலையிற் றீயுண்டென்னு மநுமிதி ஞானந் தோன்றும்.

அற்றாயின், எங்ஙனம் முன்னரட்டிலிற் புகை ஞானம் யாதது தீ யநுமாபகமன்று. அஃதொக்கும்; வியாத்தி கிரகிக்கப்படாமையின், வியாத்தி கிரகிக்கப்படுகையிலே அது பிற்றோன்றலின். ஆயின் வியாத்தி துணிந்தபின் பட்டிலின்கண்ணே தீ யநுமிக்கப்படும்; இங்ஙனமன்று. தீயது காட்சியானையன்மையின். ஐயப்படுபொருளநுமிக்கப்படும். எங்ஙனம் பாஷ்யகாரராற் கூறப்படும்? அறியப்படாத பொருளிலும் துணிந்த பொருளிலும் நியாயம் பிரவர்த்திக்காது; மற்றென்னெனின், ஐயப்படும் பொருளில். ஆயின்; மலையடைதனை மாத்

திரமாகிய மகற்குப் புகைஞானந் தீயை யநுமிக்கப் பண்ணுதலென்? இவ்விடத் தையமுண்டன்றே; சாதித்தல் பாதித்தலாகிய பிரமாணமின்மையால், ஐயநியாயத்தாலடைதலின் அஃதொக்கும்; கிரகிக்கப்படாத வியாத்தியான் போலக் கிரகித்து மறந்த வியாத்தியுடைய மகற்கு மநுமாநம் பிறவாமையால், வியாத்திநினைவு மநுமிதி யேதுவாதலின். புகைகாண்டலாலெழுந்த வாசனையுடையனெப்பொழுது புகையதுவது தீயது, எங்ஙனம், அட்டிலென்று வியாத்தியை நினைப்பான். ஆதலிற் புகைக்காட்சி தோன்றலின் வியாத்தி நினைவு தோன்றாமையின் இதுவும் புகையுடைத்தென்னும் புகைஞானம் யாது, அது மூன்றாவது. அதுவே தீயை யநுமிக்கப்பண்ணும், மற்றையவல்ல. அதுவே யிலிங்கபராமரிசம். ஆதலி லிலிங்கபராமரிச மநுமாநமென்னு மிது துணியப்படும்.

## சுவார்த்தாநுமாநம்.

அவ்வநுமாநமுஞ் * சுவார்த்தமும் பரார்த்தமு மென இருவகைப்படும். சுவார்த்தந் தன்னுணர்வி னேது அங்ஙனமன்றே, தானே யட்டில் முதலியவற்றின் விசிட்டமாகிய காட்சியாற் புகை தீக்களது வியாத்தியைக் கிரகித்து, மலையருகடைந் ததன்கண் ணையமுடையனாய், மலையி லிகழ்வதாயினை விடாதமூலத்ததாய் விண்ணுறிஞ்சும் புகை

யொழுங்கைக் கண்டு, புகைகாண்டலா லெழுந்த வாசனையுடையனாய், யாண்டுப்புகை ஆண்டுத்தீயெ ன்று வியாத்தியை நினையாநின்றான், ஈண்டும் புகை யுண்டென்றுணராநின்றான் ஆதலின் இம்மலையிற் றீயுண்டென்று தானே யுணராநின்றான். அதுவே சுவார்த்தாநுமானம்

## பரார்த்தாநுமாநம்.

தான் புகையாற் றீயை யநுமித்துப் பரனைக்குறி த்துப் போதிக்கும்பொருட்டுப் பஞ்சாவயவ அநு மாநவாக்கியம் யாது கூறுகின்றான் அது பரார்த் தாநுமாநம் அஃதெங்ஙனம்? மலை தீயுடைத்து' புகை யுண்மையான்' யாது யாது புகையுடைத் தது வது தீயுடைத்து எங்ஙனம், அட்டில்' இதுவு ம ங்ஙனம். ஆதலி லங்ஙனம் என்பதே. இவ்வாக்கி யத்தானே பிரதிபாதிக்கப்பட்ட பஞ்ச ரூபத்தோ டு கூடிய அவ்விலிங்கத்தாற் பரனுந் தீயை யுணராநி ன்று'. ஆதலின் இது பரார்த்தாநுமாநம்.

இதின், மலைக்குத் தீ யுண் மை சாத்தியம். புகை யுண்மை யேது அதுவும், அந்நுவயவியதிரேகி அந்நுவயவிய திரேகி' அந்நுவயத்தானும் வியதிரேகத்தானும் வியாத்தி யுடைமையின். அங்ஙனமன்றே, "யாண் டுப் புகை, ஆண்டுத் தீ எங்ஙனம், அட்டிலில்' என் பது அந்நுவயவியாத்தி' அட்டிலிற் புகை தீக்கள தந்நுவய உண் மையது காட்சியின்

இங்ஙனம், 'யாண்டுத் தீயில்லை ஆண்டுப்புகையு மில்லை, எங்ஙனம், மடுவில்" என்பது வியதிரேக

பியாத்தி; மடுவிற் புகை நீக்கள் அது வியதிரேக உண்மையது காட்சியின்

வியதிரேக வியாத்திக்குக் கிரமமிது; அந்நுவய வியாத்தியில் யாது வியாப்பியம், அதனின்மை யீண்டு வியாபகம், யாது வியாபகம், அதனின்மை ஈண்டு வியாப்பியமென்று, அங்ஙனங் கூறப்பட்டது. உண்மை வியாப்பியமும் வியாபகமும் இன்மைக்கு மாறு வரும். ஆதலினிங்ஙனம் புகையுண்மை யேதுவி லந்நுவயத்தானும் வியதிரேகத்தானும் வியாத்தியுண்டு.

வாக்கியத்தில், அந்நுவயவியாத்தியொன்றே பிரதரிசிக்கப்பட்டதேது? அதொன்றானும் பயனுதலின்; அவற்றுள்ளும், அந்நுவயஞ் செவ்விதாதலிற், பிரதரிசநஞ் செந்நெறியாற் சித்திக்கும் பொருட்குக் கோடுநெறியாற் சாதித்தல் யோகமாகாமையின்; வியதிரேக வியாத்தி யின்மையினன்று ஆதலி லிங்ஙனம் புகை யுண்மையேதந்நுவய வியதிரேகியே. இங்ஙன மேனையவும் அநித்தியத்துவமுதலிய சாதிக்கையிற் கிருதகத்துவமுதலியஏதுக்களந்நுவயவியதிரேகிகளாக அறியத்தக்கன

**கேவலவி திரேகி.** ஒரோவொரேதுக் கேவலவியதிரேகி. அஃதெங்ஙனம்? சான்மகத்துவஞ் சாதிக்கையிற் பிராணாதியுடைமையேது;எங்ஙனம்? 'சீவச் சரீரஞ் சான்மகம்; பிராணாதி யுடைமையின்: யாது சான்மகமன்றது பிராணாதி யுடைமைய தன்று, எங்ஙனம், குடம்; இச் சீவச் சரீர மங்ஙனன்று; ஆதலினி

ங்ஙனமன்று" என்கை. இதிற் சிவச்சரீரத்தினது சான்மகத்துவஞ் சாத்தியம் பிராணாதியுடைமை யேது. இது கேவலவியதிரேகி; அந்நுவய வியாத்தி யின்மையின் அங்ஙனமன்றோ, யாது பிராணாதியுடைய ததுசான்மகம், எங்ஙனம் இதுவென்று திட்டாந்தமில்லை சர்வ சிவச்சரீரமும் பக்கமே

இலக்கணமுங் கேவலவியதிரேகி யேது எங்ஙனம்? பிருதிவி யிலக்கணங் கந்தமுடைமை. இவ் விவாதபதம்* பிருதிவி; கந்தமுடைமையின்: யாது பிருதிவியன்றது கந்தமுடையதன்று, எங்ஙனம்? புனல். இதில் யாது கந்தமுடையது, அது பிருதிவி எங்ஙனம், இதுவென்று திட்டாந்தமில்லை.

பிரமாண இலக்கணமாகிய பிரமாகரணத்துவமு மவ்வாறே அங்ஙனமன்றோ, காட்சி முதலியன பிரமாணமென்று வியவகரிக்கத்தக்கன; பிரமாகரணத்துவ மாதலின்: யாது பிரமாணமென்று வியவகரிக்கப்படா தது பிரமாகரண மன்று எங்ஙனம்? காட்சிப்போலி முதலியன இதில், யாது பிரமாகரணம் அது பிரமாணமென்று வியவகரிக்கத் தக்கது எங்ஙனம்? இதுவென்று அந்நுவய திட்டாந்தமில்லை; பிரமாணமாத்திரம் பக்கஞ்செய்தலின் இதில், வியவகாரஞ் சாத்தியம்; பிரமாணத்துவமன்று; அதற்குப் பிரமாகரணத்துவமாகிய ஏதுவினின்றும் வேறின்மையிற் சாத்திய அபேததோஷம் வருதலின் ஆதலினிங்ஙன கேவல வியதிரேகிகள் காட்டப்பட்டன

வேறோ ரேது கேவலாந்நுவயி.

கேவலாநநுவயி. எங்ஙனம்? "விசேட மபிதேயம்; பிரமேயமாதலின்: யாது பிரமேய ம், அஃது அபிதேயம் எங்ஙனம் குடம்; இதுவு மங்ஙனம் ஆதலினிங்ஙனம்' என்கை இதில், விசேடத்திற் கபிதேயத்துவஞ் சாத்தியம்; பிரமேயத்துவமேது. அதுவுங் கேவலாந்நுவயியே யாதபிதேயமாகா தது பிரமேயமுமாகாது; எங்ஙனம், இது வென்று வியதிரேக திட்டாந்தமில்லை. எவ்விடத்தும் பிராமாணிகப் பொருளே திட்டாந்தம். அதுவும் பிரமேயமு மபிதேயமும்

பஞ்சரூபங்கள். இவ்வந்நுவய வியதிரேகி, கேவலாந்நுவயி, கேவலவியதிரேகி, யென்னு மேதுக்களது மத்தியில், எவ்வேது அந்நுவய வியதிரேகி, அது பஞ்சரூபத்தோடு கூடியே தனது சாத்தியத்தைச் சாதிக்கவல்லது; ஒரு ரூபத்தானுங் குறைந்ததாகாது

அப் பஞ்சரூபங்கள், பக்கத் தருமத்வஞ், சபக்கத்திற் *சத்துவம், விபக்கத்தில் §வியாவிருத்தி, அவாதித விடயத்வம், †அசத்பிரதிபக்க மென்பனவாம் இப் பஞ்சரூபங்கள் புகையுடைமை முதலிய அந்நுவயவியதிரேகி யேதுக்களி னிருக்கும். புகையுடைமை பக்கமான மலைக்குத் தருமம், மலையினிருத்தலின் இங்ஙனஞ் சபக்கத்தினும் ம சபக்கமாகிய அட்டிலினிருக்குமென்பதுபோ

* சத்துவம்-உண்மை. § வியாவிருத்தி-நீக்கம்
† அசத்-இன்மை

ருள். இங்ஙனம் விபக்கமாகிய டுவி னீக்கம் ஆ
ண்டில்லையென்பது பொருள். இங்ஙனம் புகை யு
டைமை யவாதிதவிடயம். அங்ஙனமன்றே பு
கையுடைமையாகிய ஏதுவுக்கு விடயஞ் சாத்திய
தருமம். அது தீயுடைமை, யாது பிரமாணத்தானு
மவாதிதம் கண்டிக்கப்படாதென்பது பொருள்.
இங்ஙனம் புகையுடைமை பிரதிபக்கமில்லது அ
ங்ஙனமன்றே சாத்தியத்தின் விபரீத சாதக ஏத்வ
ந்தரம் பிரதிபக்கமென்று கூறப்படும். அதுவும் பு
கையுடைமை யேதுவினின்றே; தோன்றுமையின்.
ஆதலி னிங்ஙனம் பஞ்ச ரூபங்கள் புகையுடைமை
யேதுவிலிருக்கும். ஆதலி னிப் புகையுடைமை
தீயுடைமையது கமகம். அது தீயுடைமையது சா
தகம் என்பது பொருள்.

தீயினது பக்கத் தருமத்துவம், ஏதுவினது பக்
கத் தருமத்துவவலியாற் சித்திக்கும். அங்ஙனமன்
றே அநுமானத்தின் சாமர்த்தியம் வியாத்தியும் ப
க்கத் தருமத்துவமுமென இரண்டு அவற்றுள், வி
யாத்தியாற் சாமாநிய சித்தி; ஏதுவினது பக்க தரு
மத்துவ வலியாற் சாத்தியத்திற்குப் பக்க சம்பந்த
த்துவ விசேடஞ் சித்திக்கும். மலைத்தருமமாகி
ய புகையுடைமையாற் றீயும் மலைச்சம்பந்தமாயே
யநுமிக்கப்படும். வேறாயிற் சாமாநியம் வியாத்தி
கிரகிப்பதானே சித்தித்தலின் அநுமானத்தாற் ப
யனென்னை?

வேறு மந்நுவயவ்யதிரேகி யெது யாதது பஞ்
சரூபத்தோடு கூடியே நல்ல ஏதுவாம். வேறாயின்,
ஏதுப்போலி ஏதுவல்லதென்னு மளவு.

கேவலாந்நுவயி நான்கு ரூபத்தோடு கூடியே த
னது சாத்தியத்தைச் சாதிக்கும் அதற்கு விபக்க
த்தி னீக்கமின்று: விபக்கமின்மையின்.

கேவலவியதிரேகி ான்கு ரூபத்தோடு கூடியே
அதற்குச் சபக்கத்தினுண் மயின்று; சபக்க மின்
மயின்

பக்கம் சபக்கம் விபக்கம் யாவை? கூறுதும்

ஐயமுடைய சாத்திய தருமத்தையுடைய தருமி
பக்கம். எங்ஙனம்? புகை அநுமாநத்தின், மலை

நிச்சித சாத்திய தருமத்தையுடைய தருமி சபக்
கம் எங்ஙனம்? இப்புகையநுமாநத்தின கண்ணே,
ட்டில்

விபக்கம் நிச்சித சாத்திய மில்லாத தருமி எங்
ஙனம்? ஆண்டே மடு ஆதலின் இங்ஙனம் அந்நுவ
யவியதிரேகி,கேவலாந்நுவயி, கேவலவியதிரேகி யா
கிய மூன்றேதுவு காட்டப்பட்டன அவற்றி
வேறுபட்ட ஏதுப்போலிகள்

## ஏதுப்போலி

ஏது லக் ண ரகிதமாய் ஏதுவைப்போல விளங்
குவன ஏதுப்போலிகள் அவையும் அசித்தம், விரு
த்தம் அநைகாந்தி ம் பிர ரணசமம், காலாத்திய
யாபதிட்டம் என்னும் பேதத்தா லைவகையே.

அவற்றுள் ஆநிச்சித பக்கவிருத்தி யசி
அசித்த . த்தம் அது ஆசிரயாசித்தம், சொரூ
பாசித்தம், வியாப்பியத்து வாசித்கமெ
மூ று கயே

ஆசிரயாசித்த மெங்ஙனம்? வான்றாமரை மண முடைத்து· தாமரைத்தன்மையால்; பொய்கைத் தாமரைபோல இதில், வான்றாமரை யாசிரயம்; அ ° துமின்றே.

சொரூபாசித்த மெங்ஙனம்? சத்த மநித்தியம்; கட்புலப்படுதலால்; குடம் போல இதிற் கட்புல ப்படுதலேது. அதுவுஞ் சத்தத்திற் கின்றே; சத்த ஞ் செவிப்புலப்படுதலின்

வியாப்பியத்துவாசித்தம் இருவகை· ஒன்று, வி யாத்தி கிரகிப்பதாகிய பிரமாணமின்மையின், மற் றைய துபாதி யுண்மையின் வியாப்பியத்துவாசி த்தம் அவற்றின், முதலதெங்ஙன்? பாது சத்து அது கணிகம், எங்ஙனம்? முகிற் படலம் சப்தாதி யுஞ் சத்து. சோப தி கதையாற் சத்துக்கு வியாப் பியத்துவாசித்தங் கூறில் வேறடைந்த கணிகத்து வம் வேண்டப்படும். இரண்டாவ தியாது? வேள் வியி னிகழுங் கொலை யதன்மசாதநம்; கொலை யால்· வேள்விப்புறத்துக் கொலைபோல இதின், அதன்மசாதநத்தின்கட் கொலைமை பிரயோசக மி ன்று மற்றென்னை? நிஷித்தத்வமே பிரயோசகம் உபாதியென்னு மளவு அங்ஙனமன்றோ? சாத் திய வியாபகத்துவமாய்ச் சாதநத்திற் கவ்வியாப கத்துவமாதல் உபாதியென லுபாதி யி க்கணம் அதுவும் நிஷித்தத்துவத்தின்க ணுண்டு நிஷித்த த்வஞ் சாத்தியமான அதன்ம சாதநத்துவத்துக் கு வியாப மே; எங்ஙனம்? யாண்டு யா டதன் ம சாதநத்துவம் ஆண் டாண் டவசிய நிஷி த்த்வ

ம். இங்ஙனஞ் சாதகமான கொலை மையை நிஷித்
தத்வம் வியாபியாது: யாண்டு யாண்டு கொலைமை,
ஆண்டாண் டவசிய நிஷித்தத்வ மின்று; வேள்வியி
னது பசுக்கொலையி னிஷித்தத்வ மின்மையின். அ
ந்ய பிரயுக்தமான வியாத்தியோடு கூடிய கொலை
மை வியாப்பியத்துவாசித்தமே

**விருத்தம.** சாத்திய விபரீதத்தோடு வியாத்தம், விருத்தம் அஃதெங்ஙனம்? சத்தநித்தம்; காரிபத்தன்மையால்: வான்போ
ல. காரியத்தன்மை சாத்தியமான நித்தியத்துவ த
துக்கு விபரீதமான அநித்தியத்துவத்தோடு வியா
த்தம் யாது காரியம் அஃ தநித்தியமே நித்தியம
ன்று. ஆதலிற் காரியத்தன்மை விருத்தம்

**அ ந ந்தி .** வியவிசாரத்தோடுகூடிய தனைகாந்திகம் அஃது சாதாரண அனைகாந்திகம் அசாதாரண அனைகாந்தி
மெனஇருவகைத்து அவற்றுள் பக்கசபக்க விபக்க
த்திலிருப்பது சாதாரண அனைகாந்திகம் எங்ஙன
ம்? சத்த நித்தியம்; பிரமேயத்தன்மையால்; வியோ
மம் போல இதிற் பிரமேயத்தன் மயேது அஃ
து நித்திய அநித்தியத்திருப்பது சபக்க விபக்க நீ
க்க மியா த தசாதாரண அனைகாந்திகம் அஃதெ
ங்ஙனம்? நிலநித்தம்; மணமுடைமையால் வியோ
மம் போல மணமுடைமை சபக் மாகிய நித்தியத்
துவமின்றும் விபக்கமாகிய அநித்தியத்துவமின்றும்
நீக்கம் நிலமாத்தி ரயி னிருத்தல்

எவ்வேதுக்குச் சாத்திய விபரீத்
பிர ரணம. த்தைச் சாதிக்கு பேத்வந்தரமுண்
டதுவேபிரகரணசமம் எஙஙனம்?
'சத்த மநித்தியம்; நித்திய தரும மின்மையால் ச
த்தநித்தியம்; அநித்தியதருமந் தோன்றுமையால்''
எ பதுவே இதுவே சற்பிரதிபக்கமென்றுங் கூற
ப்படும்

பிரமாணாந்தரத்தாற் று
ால ததிய ாபதிட்டம. ணிந்த சாத்திய பின்மை
யேது வாதித விடயம்
காலாத்தியயாபதிட்டமென ( ) கூறப்படும் எங்ங
னம்? தீ வெப்மையிலது; பதார்த்தத்வத்தால்; பு
னல்போல இதில் பதார்த்தத்வமான ஏதுவுக்குச்
சாத்தியம் வெம்மையின்மை. அதன்மை ாட்சி
பாேடா துணியப்பட்டது, பரிசனக் காட்சியால்
வெம்மை தோன்றலின் ஆதலி னிங்ஙன மநுமா
நம் உணர்த்தப்பட்டது.

## 3 உபமாநம.

அதிதேச வாக்கியப் பொருணினேவோடு கூடிய
ஆவொப்புமை விசிட்ட பிண்ட ஞாநம் உபமாநம்
எங். னம்? ஆமா வுணராறும், எங்ஙனம் ஆ அங்
ஙனம் ஆமா, என்றே ராரணியக புருஷனுற் கேட்
டு வநத்துட் புக்கு வாக்கியப்பொரு ணினேத்துக்
கொண்டு, எப்போ தாவொப்புமை விசிட்டபிண்ட
ங் காணுகின்றுன், அப்போதவ் வாக்கியப் பொரு
ணினே ாடு கூடிய ஆவொப்புமை விசிட்ட பி

ண்ட ஞானம் ரூபமானம்; உப ' தியைக் குறித்துக் கரணயாதலின். ஆவொப்புமை விசிட்ட பிண்டங் கண்டபின்னர், இது ஆமா சப்த வாக்கியமான பிண்டமென்னு நாம நாமி சம்பந்த ப்ரதீதி யுபமிதி. அதுவே பலம். இங்ஙன ரூபமாந ருணர்த்தப் பட்டது.

## 4. சப்தம்.

ஆப்த வாக்கியம் சப்தம். ஆப்தன் உள்ள பொருளை யுபதேசிக்கும் புருஷன். வாக்கியம், அவாய் நிலை, யோக்கியதை, அண்மையுடைய பதங்களின து சமுகம். ஆதலினானே "ஆபுரவி மகன் யானை" யென்னும் பதங்கள் வாக்கியமல்ல, ஒன்றற்கொன் றவாய்நிலை யின்மையின். "தீயானனைக்க" என்பது வாக்கியமன்று, யோக்கியதையின்மையின். தீ நனைத்தல்கட் கொன்றற் கொன் றன்வய யோக்கியதை யின்றே. "தீயால்' என்னு மூன்றுவதால் "நனைத்தல்" ஆகிய காரியத்தைக் குறித்துக் கரணத்தன்மை நீக்குக் கூறப்பட்டது. தீ நனைத்தற் கரணமாம் பொருட்டு யோக்கியமன்று. ஆதலிற் காரிய கா ரண பாவ இலக்கண சம்பந்தத்திற் றீ நனைத்தல் க' கு யோக்கியமின்மையிற் றீயானனைக்க என்பது வாக்கியமன்று. இங்ஙனம் ஒவ்வொரு யாமத்தின் ஒருங்குச்சரிக்கப்படாத "வெள்ளை—ஆவைக் கோலாற் கொணர்க" என்னும்பதங்கள் வாக்கியமல்ல. ஒன்றற் கொன் றன்வய யோக்கியதையுளதா

யினும், ஒன்றற்கொன் றவாய் நிலையுளதாயினும் ஒன்றற்கொன் றண்மையின்மையின். யாவை அவா ய்நிலையன, யோக்கியதையன, அண்மையன, அவை பேவாக்கியம் எங்ஙனம்? 'சியோதிட்டோமத்தா ற் றுறக்கம் வேண்டியான் வேட்க' என்பது முதலி யன; "ஆற்றங்கரையிலைந்து கனிக ளிருக்கின்றன" "ஆவைக் கொணர்தி' என்பன முதலிய பதங்கட ாமே விளம்பமின்றி யுச்சரிக்கப்பட்டன.

அற்றாயின், இதிற் பதங்க ளவாய்நிலையன அல்ல மற்றென்னெனிற் பொருள்கள்' கனி முதலிய ஆ தேயங்கட்கே கரை முதலிய ஆதார அவாய்நிலைமை யால்: ஆராயிற் பொருள்களும் அவாய்நிலையனவல் ல; அவாய்நிலை இச்சை வடிவாய சேதந தருமமா தலின்: அப்பொருள்க ளுணர்த்தும் பதங் கள் கேட்பானுக் கொன்றற்கொன்று விடயமான அ வாய்நிலையைத் தோற்றுவித்தலின், அவாய் நிலையன வெனக் கூறப்படும் அதன் வழியா லதனைக் கூறு ம் பதங்களு மவாய் நிலையனவென உபசரிக்கப்படு ம். பதங்களே பொருளைப் பிரதிபாதித்துக்கொண் டு பொருள் வேறுபாட்டு விடய அவாய்நிலையை த் தோற்றுவிப்பனவென்னு முபசாரத்தா லவாய் நிலையன வென்றுமாம் இங்ஙனம் பொருள்க ளவா ய்நிலையன; ஒன்றற்கொன் றந்வய யோக்கியமுடை யனவுமாம் அதுவழியாற் பதங்களு மவாய் நிலைய ன யோக்கியமுடையன வென் றுபசரிக்கப்படும் அண்மை பதங்க ளொருவனானே விளம்பமின்றி உ ச்சரிக்கப்படுதல். அதுவுஞ் சாட்சாதே பதங்களினு டைமை; பொருள்வழியா னன்று ஆதலின் இப்பொ

ருளுண்டாயிற்று. பொருள் கூறும் வழியாற் கேட்பானுக்குப் பதவேறுபாட்டு விடய அவாய்நிலையையாயினும் பொருள் வேறுபாட்டு விடய அவாய்நிலையையாயினுந் தோற்றுவிக்கின்ற, விளங்கும் ஒன்றற்கொன்றந்வயமான யோக்கியப்பொருளைக் கூறுகின்ற அண்மையுடையபதங்களது கூட்டம் வாக்கியம்; பதமு மெழுத்துக்கூட்டம்* ஈண்டுக்கூட்ட மொருஞான விடயமாதல். இங்ஙனம் அதின் முறையுடயவாகிய எழுத்துக்கட்கு விரையக்கெடுதலுண்மையின் ஒருங்கே அநேக வெழுத் தநுபவமுண்டாகாமையின் முதன்முத லெழுத்துக்களை அநுபவித் திறு றெழுத்துக் கேட்குங்கால் முதன்முதலெழுத் தநுபவத்தாற் பிறந்த வாசனையோடு கூடிய ஈற்றெழுத்தோடு பொருந்தி''' பதத்திற்கமைந்த பொருட் சங்கேதங் கிரகித்தலால் அளிக்கப்பட்ட செவிப்புலனால் ஒருங்கே சதசத்தான பலவெழுத்தை யகப்படுக்கும் பதவுணர்வு தோன்றுந் துணைவலியால் பிரத்யபிஞா ம் போலப் பிரத்யபிஞா க் ாட்சியில் அதீதமாயு முன்னரவத் ததோ ' றுமே அன்றே பின்னர் முதன்முதற் பதாநுபவத்தாற் றோன்றிய வாசனையோடு கூடிய பதப்பொருண் ஞானத்தால் அளிக்கப்பட்ட ஈற்றுப் பதவிடயச் செவிப்புலனாற் சதசத்தான பல பதத்தை அகப்படுக்குப் வாக்கியஞானமுண்டாம்

* பதம் ' எழுத்துக் கூட்டம்' என்றாரேனும் சிறுபான்மை ஓரெழுத்தே பதமாதலுமுளதென்றறிக.

இவ்வாக்கியம் ஆப்த மகனாற் கூறப்பட்டுச் சப்தப் பிரமாணமாம். அதற்குப் பலம் வாக்கியப் பொருளுணர்வு. இச் சத்தப் பிரமாண லக்கணம் லகினும் வேதத்தினும் பொது. உலகத்தின் இது விசேடம். யாவனாயினு மொருவ னாத்தனாவான்; அனைவருமல்லர் ஆகலின் உலக வாக்கியஞ் சிறிதே பிரமாணம் ஆப்தனைக் கருத்தாவாகவுடைய வேதத்திற் பரமாப்தனான சிறிமகேசனாற் கூறப்பட்ட வாக்கியமெல்லாம் பிரமாணம்; எல்லாம் ஆப்தவாக்கியமாதலின்.

நான்கு பிரமாணமும் வர்ணிக்கப்பட்டன இவற்றின் வேறாயின பிரமாணமல்ல; பிரமாணமாயினும் கண்டேய ங்குதலின்

அருத்தாபத்தி

அற்றாயின், அருத்தாபத்தியும் வே று பிரமாணமாகவுண்டு அங்ஙனமன்றோ, பரியனான தேவதத்தன் பகலுண்ணானென்று கண்டாயினுங் கேட்டாயினு மிரவுண்டல் கற்பிக்கப்படும், பகலுண்ணானது பருமை யிரவுண்டலன்றிக் கூடாது ஆதலின் பருமை வேறொன்றா லாகாமை தோற்றுவித்த அருத்தாபத்தியே இரவுண்டலிற் பிரமாணம், அது காட்சி முதலியவற்றின் வேறு, இரவுண்டல் காட்சி முதலியவற்றிற்கு விடயமாகாமையின்: இங்ஙனமன்று; இரவுண்டல் அநுமானவிடயமாதலின் அங்ஙனமன்றோ, தேவதத்தன் இரவிலுண்பன், பகலு

ன்றுனுயினும் பரியனுதலின், யாவனொருவ ிர விலுமுண்ணு னன் பகலுமுண்ணுனுயும் பரியனுகான், எங்ஙன் ? பகலிரவிலுமுண்ணுன் பரியனுகான்; இவன் அங்ஙனமல்லன், ஆதலின அங்ஙனமல்லன், என் னும் கேவலவியதிரேகி அநுமானத்தால் இரவுண் டமேன்றலின், அருத்தாபத்தி கற்பனையாற் பய னென் ?

அபாவம்.

அற்றுயின், அபாவமெனபதும் வேறு பிரமாண மாயுண்டு; அதுவும், இன்மை கவர்தற்பொருட்டு வேண்டப்படும், அங்ஙனமன்ேறு, குடமுதலியவ ற்றி னநுபலத்தியாற் குடமுதலியவற்றி னபாவந் துணியப்படும். (அநுபலத்தி உபலத்தியின்மையெ ன்றது) அபாவப் பிரமாணத்தாற் குடமுதலியவ ற்றின்மை கிரகிக்கப்படும்: இங்ஙன மன்று; ஈண் டுக் குடமுண்டாயின், அப்போது நிலம்போலக்கா ணப்படும்; குடங் காணப்படாதிருப்பதே, அதனு ற் காட்சியி மைபி னில்லையென்னுந் தருக்கத்து ணையுடைய தோன்றுமையோடு கூடிய காட்சியா னே, அபாவம் கிரகிக்கப்படுதலின்.

அற்றுபின் இந்திரியங்க டம்மோடு சம்பந்தப் பொருள் கிரகிப்பன அங்ஙனமன்ேறு; இந்திரி யங்கள் வஸ்துவை ய டந்து விளக்கும். ஞாநகர ணமாதலின்; ஆலோகம் போல இங்ஙனமாயினு ங் கண் செவிகள் வஸ்துவை அடைந்து விளக்கு ம்; புறவிந்திரியமாதலின்; மெய் முதலிய போல மெய் முதலிய அடைந்து காரியப்படுதல் உபயவா

திசத்தமே இந்திரிய அபாவங்கட்குச் சம்பந்த மேயில்லை, சம்பந்தங்கள் சையோக சமவாயமேய ன்றோ? அவை, அவற்றிற்கில்லை; விசேடண விசே டிய பாவஞ் சம்பந்தமேயன்று' வேருதல், இரு பொருட்கணிற்றல், ஒன்ருதலின்மையின் சம்பந் தஞ் சம்பந்தி ளில் வேருதலும் உபய சம்பந்திகளி லடைதலு மொன்ருதலு முடையத 'ரோ? எங்ங னம்? முரசு குணிற் சையோகம் அது முரசு கு ணில்களில் வேருதலு மவற்றை யடைதலு மொன் ருதலுயாம் விசேடண விசேடிய பாவ மங்ஙனமு ன்று; அங்ஙனமன்ரு, தண்ட புருடனுடைய வி சேடண விசேடிய பாவம் அவற்றின் வேறன்று' தண்டத்திற்கு விசேடணத்துவம் வேறு பொருள ன்று' மற்றென் 'னனிற் சொரூபமே—அபா மு ம் விசேடணமாதலின் திரவியமுதலியவற்றின் வே. ருன ஒருபொருள் அபாவத்திற் சம்ப மாகாது ஆதலின் அபாவத்திற்குத் தன்னை யுடையதென் னு ம் புத்தி யத் தோற்றுவிப்பதான சொரூபம் யா தது வே விசேடணத்துவம்' அது வேறுபொருளன் று இங்ங ம் வியாபகத்துவ காரணத்துவ முத லியவு மூரி ' த்தக்கன தன்னோடு கூடியதென் னும் புத்தியைத் தோற்றுவிப்பதான சொரூபம் யா தது தி முதலியவற்றிற்கு வியாப த்துவம்; று ' முதலியவற்றிற்குக் ாரணத்துவமுங் ாரியத் தாற் ருெடரப்பட்ட அ. ' துவயவியதிரேகி சொரூப மே; வேறு பொருளன்று' அபாவமும் வியாபகமா தலின் ாரணமுமாதலின் அபா த்திற் சாமாநி ய முதலியன சம்பவுமா ா இங்ஙனம் விசேடண

விசேடிய பாவம் விசேடண விசேடிய ரூபத்தினின்று வேறன்று; இருபொருட்க ணிற்பதுமன்று விசேடணத்தில் விசேடண பாவமாத்திர முண்மையின், விசேடியபாவமின்மையின் விசேடியத்திலும் விசேடிய பாவமாத்திர முண்மையின், விசேடணபாவ மின்மையின் ஒன்றுமன்று விசேடணத்தினது பாவமும் விசேடியத்தினது பாவமுமென உம்மைத் தொகை யீற்றினின்ற பாவமென்னுஞ் சொல் வேறுவேறு புணரும் இவ் இரண்டு, சம்பந்தம் ஒன்று; ஆதலின் விசேடண விசேடியபாவஞ் சம்பந்தமன்று இங்ஙனம் வியாப்பிய வியாபக பாவ முதலியவும் சம்பந்தம் என்னுஞ்சொற் பிரயோக மிரண்டாற் கூறப்படுதல் ஒப்புமையால், உபசாரமாமின் ஆதலின் சம்பந்தமில்லாத அபாவத்தை இந்திரியத்தாற் கிரகித்தலுண்டாகாது: அஃதொக்கும்; வியாத்தி பாவத்தோடு கூடியதாதலின், பாவத்தை விளக்கு மிந்திரிய மடங்கேவிளக்கும்; அபாவமன்று பாவத்தை விளக்கு மிந்திரியம் விசேடண விசேடிய முகத்தானே யென்பது சித்தாந்தம் சம்பந்தமில்லாத அபாவங் கிரகித்தலில் அதிப் பிரசங்க தோஷம் விசேடணத்துவத்தானே விலக்கப்படும் பரமதத்தினுமொக்கும்.

## பிராமாணயம

இஃதிப்போது கூறப்படும் புனன் முதலிய ஞானந் தோன்றுமையில் அந்த ஞானத்தினது பிராமாண்யந் துணிந்தொருவன் புனன் முதலியவற்றிற்

செல்லாநின்றான்; ஒருவன் ஐயத்தானே சென்றான்,
சென்ற பிற்காலத்துப் புனன் முதலியவற்றை ய
டைந்தபோது பிராமாண்யந் துணிகின்றான்—இது
வஸ்து கதி. இதில் ஒருவன் கூறினான்: முன்னரே
பிராமாண்யந் துணிந்து மகன் செல்கின்றான்; தன்
னாலே பிராமாண்யந் துணியப்படுதலின். இதன்
பொருள்: எதனானே ஞானங் கிரகிக்கப்படும், அத
னானே யதனையடைந்த பிராமாண்யமும்; ஞான கரு
மமாகிய பிராமாண்யங் கிரகிப்பது ஞானங் கிரகிப்ப
தின் வேறன்று. ஆதலின் ஞானத்தை யடைந்த பி
ராமாண்யத்திற்குத் தன்னாற் றுணிதல் ஞானங் கிர
கிப்பதின் வேறு வேண்டாமையே. ஞானமுஞ் செ
ல்வதற்கு முன்னமே கிரகிக்கப்படும். வேறாயின்,
பிராமாண்ய அப்பிராமாண்ய ஐயமும் எங்ஙனமு
ண்டாம்? ஆதலின் செல்வதற்கு முன்னமே ஞா
னத்தை வேறொன்றாத் தோன்றாமை தோற்றுவித்த
அருத்தாபத்தியால் ஞானங் கிரகிக்கப்படுகையில்,
ஞானத்தையடைந்த பிராமாண்யமும் அருத்தாபத்
தியானே கிரகிக்கப்படும். பின்னர்ப் புருடன் செல்
வன். முதல் ஞானமாத்திரம் கிரகிக்கப்படும். பின்
பு, சென்றதற்குப் பின் பலங் கண்டலால் ஞானத்
திற்குப் பிராமாண்யந் துணியப்படும் என்பதன்று
இதிற் கூறுதும். ஞாதத்வம் வேறொன்றாய்த் தோ
ன்றாமை தோற்றுவித்த அருத்தாபத்தியால் ஞானங்
கிரகிக்கப்படுமென் றியாது கூறப்படும் அதுவே பு
டம்பாட்டதன்று. அதனாற் பிராமாண்யங் கிரகித்
தல் செய்மைக்கண்ணே நீங்கும். அங்ஙனமன்றோ
பரனுடைய அபிமதமிதன்றோ? குட முதலிய விடய

ஞாநந் தோன்றுழி யென்று லறியப்பட்ட திக்கு டமென்று குடத்திற்கு ஞாதத்துவந் துணியப்படும். ஆதலின் ஞாநமுண்டாகையில் ஞாததையென்றொரு தருமம் பிறக்குமென் றநுமிக்கப்படும். அதுவும் ஞாநத்திற்கு முன் பிறவாமையின், ஞாநம் பிறக்கையிற் பிறத்தலின, அந்நுவயவியதிரேகங்களால் ஞாநத்தாற் பிறக்குமென்று துணியப்படும் இங்ஙனம் ஞாநத்திற் பிறந்த இஞ்ஞாததையென்பதொரு தருமமுண்டு. அதுவும் ஞாநமல்லாமற் பொருந்தாது; காரணமன்றிக் காரியந் தோன்றாமையின். ஆதலின் அருத்தாபத்தியா லதன் காரண ஞாநம் ஞாததையாற் றுணியப்படுமென இது கூடாது ஞாநவிடயதை இதின் வேறான ஞாததையிற் பிரமாணமின்மையின்.

அற்றாயின் ஞாநத்திற் பிறந்த ஞாததை யாதாரத்துவமேயன்றோ குட முதலியவற்றிற்கு ஞாநவிடயத்துவம் அங்ஙனமன்றோ தாதாத்மியத்தால் விடயதையில்லை; குடஞாநங்கட்குத் தாதாத்மியமின்மையின் அதனிற் றோன்றலால் விடயத்துவங் கூறில் இந்திரியங்கட்கு விடயத்துவம் வரும் இந்திரியங்களானும் அந்த ஞாநந் தொன்றுதலின்.

ஆதலின் இது யூகிக்கப்படும் ஞாநத்தாற் குடத்திலொன்று பிறப்பிக்கப்படும். எதனாற் குடமெயந்த ஞாநத்திற்கு விடயமாம் வேறன்றென்று ஆதலின் விடயத்துவம் வேறொன்றாய்த் தோன்றாமையானே ஞாததை யறியப்படும் காட்சி மாத்திர யானேயன்று: இங்ஙனமன்று; இயற்கையானே விடயத்துவங் கூடுதலின் பொருள்ஞாநங்க

ட் இத்தன்மையவே யியற்கை விசேடம் ஏதனால் அவற்றிற்கு விடயவிடயீ பாவம் வேறுயின் இறப்பெதிர்வுகட்கு ீடயத்துவ மின்றுதல் வேண்டும். அவற்றில் ஞாநத்தால் ஞாததை தோன்றுதல் கூடாமையின் இல்லாத தருமியி ர தருமந் தோன்றுதல் பொருந்தாமையின் இன்னும் ஞாததையும் ஞாநவிடயமாகலின் அத ' கண்ணும் வேறு ஞாததை வர 'வேண்டும். அங்ஙனமாயின் அநவத் த. ஆயின் வேறு ஞாததை யின்றியும் இயற்கையானே ஞாததைக்கு விடயத்துவமென்னிற் குடமுதலிய ற்று ஞாததையாலென ஞாததையுண்டாகும் ஆயினும் அதனானே ஞாநமறியப்படும் பிராமாண்யங் இரகிக் ப்படாது பிரமாண ஞாந நீ ' காத ஞாததை விசேடத்தால் பிராமாண்ய ' இரகிக்கப்படும். பிராமாண்யத்திற்கு ஞாநங் இரகிப்பதானே இரகிக்கப்படுதல் யாண் டயது? ஆயின் பிரமாண ஞாந நீங்காத ஒரு ஞாததை விசேடத்தால் ஞாநப் பிராமாண்ய ' கள் கூடவே இரகி ' ப்படும்

இங்ஙனமாயின் அப்பிராமா 'ரயத்திலும் இது கூறலாம். அப் பிரமாண ஞாநநீங்காத ஒரு ஞாததவிசேடத்தால் ஞாந அப் பிராமாண்யங்கள் கூடவே கவரப்படுமென்று அப் பிராமா ' யமு ' தன்னானே கவரப்படும் இங்ஙனமாயினும் அப்பிராமாண்யம் பிறிதானே பிராமாண்யமும் பிறிதானே இரகிக்கப்படும். ஞாநங் கிரகித்தலின் வேறென்பதிதன் பொருள் ஞாந மாநந்தக் காட்சியாலே ரகிக் ப்படும்; பிராமாண்யம் அநுமாநத்தால்

அங்ஙனமன்றே புனன் ஞானத்திற்குப் பின் புன ல் வேண்டியானது செலவிருவகை, பலமுடைய தும் பலமில்லதுமெ ன. அவற்றள் யாது பயனே கூடிய தது பலமுடைச் செலவு. அதனல் ஞான த்திற்கு மெய்மை யநுமிக்கப்படும். பிரயோகமும்: விவாதத்தாற் றழுவப்பட்ட புனன்ஞானம் பிரமா ணப் பயனுடைச்செலவுதோற்றுவித்தலான். யா துபிரமாண மன்றது பயனுடைச் செலவைத்தோ ற்றுவியாது; எங்ஙனம்? பிரமாணப் போலி. இது கேவலவ்யதிரேகி. இதிற் பயனுடைச் செலவைத் தோற்றுவிப்பதான புனன் ஞானம் யா தது பக்க ம் அதனது பிராமாண்யம் சாத்தியம் மெய்மை யதாமென்று பொருள். பிரமாகரணத்துவமன்று; நினைவால் வியபிசாரம் வருதலின். எது சமர்த்த ப்பிரவிருத்தி சநகம்—பய டைச் செலவைத் தோற்றுவித்த தென்னு மளவு. இக்கேவலவியதி ரேகி யநுமானத்தா லப்பியாச தசையி லுண்டான ஞானத்திற்குப் பிராமாண்யந் துணிகையில் அது திட்டாந்தமாகச் செலவுக்கு முன்னருந் தன் சா தியத்துவத்தால் அந்நுவயவியதிரேகி யநுமானத் தாற் பயின் றறியாத ஞானத்தினது பிராமாண்யம நுமிக்கப்படும் ஆதலிற் பிறிதானே பிராமாண்ய ம் ஞானங் கிரகிப்பதாமென, கிரகிக் ப்படுவதன்று. பிரமாணங் ள் கூறினும், பிரமேயங்கள் கூ றதும். பிரமாண முற்றும்.

## உ, பிரமேயம்.

ஆன்மா, சரீரம், இந்திரியம், அருத்தம், புத்தி, மநம், பிரவிருத்தி, தோடம், பிரேத்தியபாவம் பலம், துக்கம், அபவர்க்கம், பிரமேயம் என்பது சூத்திரம்.

### 1 ஆன்மா.

அவற்றுள் ஆன்மத்துவ சாமாநியவான் ஆன்மா. அவனும் தேகேந்திரியங்களின் வேறாயினன், சரீரங்கடோறும் பின்னமாயினன்; விபு; நித்தியன்; அவனு மாநதக் காட்சியான். விபாகத்திற் புத்தியாதி குணவிங்கமுடையன், அஙஙனமன்றே, புத்தியாதிகள் குணங்களா; அநித்தியமாய்க் கொண்டோ ரிந்திரியத்தாற் கிரகிக்கப்படுதவால்; ரூபம் போல. குணமுங குணியைப் பற்றியதே. அவற்றுள், புத்தியாதிகள் பூதங்கட்குக் குணமல்ல; மாநதக் காட்சித் தன்மையால். யாவை பூதங்கட்குக் குணங்கள் அவை மநத்தாற் கிரகிக்கப்படா எஙஙனம்? உருவாதிக டிக்குக் கால மநங்களுக்குக் குணங்களல்ல; விசேட குணமாதலின். யாவை திக்காதி குணங்கள் அவை விசேடகுணமல்ல; எங்ஙனம்? சங்கியை முதலிய அவை யெல்லாப் பொருள்கட்கும் பொதுக்குணங்கள் புத்தியாதிகள் விசேட குணங்களே; குணமாய்க் கொண்டோ ரிந்திரியத்தாற் கவரப்படுதலின் உருவம் போல ஆதலிற் திக்காதிகளுக்குக் குணங்களல்ல. ஆதலின் இவ் வெட்டுத் திரவியங்களினின்றும் வேறாய்ப் புத்தியாதிகட்குக் குணி வேண்டத் தக்கது. அதுவே

யா 'மா பிரயோ மும்: புத்தியாதிகள், பிருதிவி யாதி யஷ்ட திரவியங் ளின் வேறான திரவியத்தை ப் பற்றுவ ' பிருதிவியாதி யஷ்ட திரவியங்களைப் பற்றுமலு குணமாதலின். யாது பிருதிவியாதி ய ஷ்ட திரவியங்களின் வேறாய திரவியத்தைப் பற்று தது பிருதிவியாதி யஷ்ட திரவியங் களைப் பற்றும ற் குணமன்ற எ 'ஙனம்? உருவாதி. இது கேவ லவியதிரேகி. அந்றுவயவியதிரேகியானும் 'ளக்கு ப எ ' ஙம்? புத்தியாதிக ' பிருதிவியாதி ஷ்ட திரவிய ' ளின் வே றான பொருளைப் பற்றுவன ' பிருதிவியாதிகளைப் பற்றும் ற் குணமாதலி ' யாது எதைப்பற்றுமற் குணம், அது அதின் வேறாயதை ப்பற்றுவதாம். எங்ஙனம்? பிருதிவியாதியைப் பற் று ஒலி பிருதிவியாதிக்கு வேறான வானைப்பற்றிய தெ ' று ஆதலின், இங்ஙனம், பிருதிவியாதி யஷ் டதிரவிய ' ளின் வேறு யொ ' பதாம்பொருளான ஆன்மாச் சித்திக்கும். அவனும் யாண்டுங் காரியந் தோன்றுதலி ' விபு பரமமகற் பரிமாணவானெ ' று பொருள். விபுத்துவத்தால் அவற்கு நித்திய அநுமானம் வியோமம் போல. சுகமுதலிய வேறு பாட்டா லுடம்பு தோறும் வேறுபாடுடையான்

## 2. சரீரம்.

அவனு 'குப் போக நிலம் உடம்பு. இன்ப துன் ப அநுபவம் போ ம் அது எதனோடு கூடிய ஆன் மாவிற் றோ ' றும் அது போக நிலம்; அதுவே ச ரீரம் சேட்டாசிரயமுட ம்பெனிநுமாம். சேட்டை, இதமகிதமடைதற் பரிகரித்தற்பொருட்டுப் புடை

பெயர்தல். புடைபெயர்தன் மாத்திரை யன்று.

### 3. இந்திரியம்

உடம்போடு சையுத்தமாய ஞாந ரணமான அதீ
ந்திரிய மிந்திரியம். "அதீந்திரிய மிந்திரியம்" என்
று கூறிற் காலாதியினு மிந்தியத்துவம்வரல்வேண்
டும். ஆதலில் "ஞாநகரணமான" என்று கூறப்பட்
டது அங்ஙனமாயினும், பொரு ளிந்திரிய சந்நிக
ர்ஷ முதலியவற்றினும், இந்திரியத்துவம் வரல்வே
ண்டும் ஆதலின் "உடம்போடு சையுத்தமாய" எ
ன்று கூறப்பட்டது "உடம்போடு சையுத்தமாய
ஞாநகரணம் என்று கூறில், ஆலோ த்தினும் இந்
திரியத்துவம் வரல்வே டும். ஆதலில் "அதீந்திரிய
ம்' என்று கூறப்பட்டது.

அவ்விந்திரியங் ளும் ஆறு; கிரா ம், இரசநம்,
சட்சு, துவக்கு, சுரோத்திரம், ம ம் என்பனவே
அவற்றுள் கந்தந் தோன்றுதற் சாதந இந்திரியங்
கிராணம்; மூக்கு நுனியினிருப்பது அதுவும் பிரு
துவிமயம். கந்தமுடை மயின்; கந்தமுடை யயு
ங் கந்தங் கவர்வதால் எவ்விந்திரியம், உருவாதி
யைந்தினுள் எக்குணத் தக் கவரும் அவ்விந்திரிய
ம் அக்குணத்தோடு கூடியது. எங்ஙனம், சட்சு ரூப
கவர்வது; உருவத்தையுடையது; அதுபோலக்
கிராணங் ந்தத்தைக் கவர்வது மதனாற் கந்தத்தை
யுடையதுமாம். இரசத் தோற்ற சாதந இந்திரியமி
ரசநம் நா நுனி யிருப்பது; அதுவு மப்புமயம்; ரூ
பாதி யந்தினு ளிரதத்துக்கே யபிவியஞ்சகமாத
லில் வாய்நீர் போல. ரூபந் தோற்ற சாதந இந்தி

ரியஞ் சட்சு; கண்மணி நுனியி னிருப்பது; அதுவு ந் தேயுமயம். ரூபாதி யைந்தினுள் ரூபத்தி ற்கே யபிவியஞ்சக மாதலில் விளக்குப் போல பரி சத் தோற்ற சாதன இந்திரியந் துவக்கு; உடம்பெ லாம் வியாபி. அதுவும் வாயுமயம் ரூபாதி ஐந்தி னுட் பரிசத்திற்கே பிவியஞ்சகமாதலின்; சரீர வியர்வத் தண்மை யபிவிஞ்ச மான விசிறிக் காற் றுப் போல சத்தத் தோற்ற சாதன இந்திரியஞ் சோத்திரம். அது செவியோடு கூடிய ஆகாயமே. (வறு பொருளன்று; சத்த குணத்துவத்தால். அ துவுஞ் சத்தங் கிரகித்தலின். எவ்விந்திரியம் ரூபா தியைந்தினுள் எக்குணத்தைக் கவர்வது, அது, அ க்குணத்தோடு கூடியது. எங்ஙனம்? சட்சு முதலி யவைகள், சத்தங் கிரகிப்பது சுரோத்திரம் ஆதலி ன், அது சத்தகுணமுடையது அற்றாயின் சட்சுமு தலிய இந்திரிய முண்மையின் யாது பிரமாணம்? கூறுதும்; அநுமானம். ரூபாதி ஞானங்கள் கரணசா த்திய கள் கிரியையாதலின் துணித்தற் கிரியை போ

## 4. அருத்தம்.

அருத்தங்கள், ஆறு பதார்த்த ள் அவைதிரவி யம் குணம், கருமம், சாமாநியம், விசேடம், சமவா யமென்பனவே.

பிரமாண முதலியன ஈண்டே யடங்குவனவாயி னும் பயன்படல்வசத்தாற் பேதமாகக் கூறப்படும்

திரவியம்

அவற்றுள் சம ாயிகாரணந் திரவியம்

யை, பரிமாணம் பிரதக்த்வம், சையோகம், விபாக
ம், பரத்துவம், அபரத்துவம், திரவத்துவம் சம்ஸ்
காரமுடையது. நித்த அநித்தமும், முன்போல
அநுற்பூத ரூப பரிசம், அநுற்பூத ரூப பரிசம்,
அநுற்பூத ரூப உற்பூத பரிசம், உற்பூத ரூப அநு
ற்பூத பரிசமென்று நால்வகை

உற்பூதரூப பரிசம் எங்ஙனம்? பிண்டத் தேயு
வான தி முதலியன உற்பூத அபிபூத ரூப பரிசம்
அநுற்பூத ரூபமென்னிற் கட்புலப்படாமை வேண்
டும்; அநுற்பூதபரிசமென்னிற் பரிசத்தாற் கிரகிக்
கப்படாமை வேண்டும் அபிபவம் வலியதாகிய தன்
சாதியான பிருதிவி சம்பந்தப் பரிசத்தாற் பண்ண
ப்படுமே. அநுற்பூத ரூப பரிசத் தேயு எங்ஙனம்?
சட்சிந்திரியம். அநுற்பூத ரூப உற்பூத பரிசம் எங்
ஙனம்? வெந்நீரிற் றேயு. உற்பூத ரூப அநுற்பூத
பரிசம் எங்ஙனம்? விளக்கினையொளி மண்டலம்.

வாயு. வாயுத்துவசம்பந்தமுடையது வாயு. துவ
க்கிந்திரியம், பிராணன், காற்று முதலியபே
தமுடையது; பரிசம், சங்கியை, பரிமாணம்,
பிரதக்த்துவம், சையோகம், விபாகம், பரத்துவம்,
அபரத்துவம், விரைவுடையது. அதுவும் பரிசத்தால்
அநுமேயம். அங்ஙனமன்றே, வாயு வீசுகையில்
வெம்மை தண்மையில்லாத பரிசம் யாதொன்று
தோன்றுகின்றது அது குணமாதலிற் குணியை
அநுமாபிக்கும் குணியும் வாயுவே; பிருதிவி தோ
ன்றுமையின். பிருதிவி வாயுவல்லதற்கு வெம்மை
தண்மையில்லாத பரிசமின்மையின். அதுவும் நித்த
அநித்த பேதத்தால் இருவகை. நித்தியம் பரமாணு

ரூப வாயு; அநித்தியங் காரிய ரூப வாயு

தோற்றமும் அழிவும்

அவற்றுட் காரியமான பிருதிவியாதி நான்கிற்கு முற்பத்தி நாச முறையே கூறுதும். இரண்டு பரமாணுக்களது வினையாற் சையோகமுண்டாகையிற் றுவியணுகந் தோன்றும். அதற்குப் பரமாணுக்கள் சமவாயிகாரணம்; அவற்றது சையோக மசமவாயி காரணம்; அதிட்டாதி நிமித்தகாரணம், துவியணு கங்களது வினையாற் சையோகமுண்டாகையிற் றி ரியணுகந் தோன்றும். அதற்குத் துவியணுகங்கள் சமவாயிகாரணம் ஒழிந்தன முன்போல இங்ங னம் திரியணுகங்களாற் சதுரணுகம், சதுரணுக ங்களா லபரதூலம், அவற்றாற் றூலதரம் தூலதர ங்களாற் றூலதமம். இங்ஙன முறையான மகாப்பி ருதிவி மகா அப்பு, மகா தேயு, மகா வாயு தோன் றும். காரியத்தை யடைந்த ரூபாதிகள் தங்கட் கி டமான சமவாயிகாரணத்தை யடைந்த ரூபாதி களாற் றோன்றும்; காரண குணங்கள் காரியகுணங் களைத் தோற்றுவிக்குமென்னு நியாயத்தால் இங் ஙனந் தோன்றிய ரூப முதலியவுடைய காரியத்திர வியமாகிய குடமுதலியவற்றிற் கவயவமான கபா லமாலாதியிற் றள்ளுதலானுயினும், புடைத்தலானு யினும் வினை தோன்றும் அதனால் விபாகம் அத னால் அவயவியைத் தோற்றுவிப்பதான அசம வா யிகாரணமான சையோகத்திற்கு நாசம்பண்ணப்ப டும். அதனாற் காரியத் திரவியமான அவயவியா ன குடமுதலியவற்றிற்கு நாசம் இங்ஙன மசமவா யிகாரண நாசத்தாற் றிரவியநாசங் காட்டப்பட்ட

ரு. ஓரிடத்துச் சமவாயிகாரண நாசத்தாற் றிரவியநாசம். எங்ஙனம்? முற்கூறிய பிருதிவியாதிகளுக்குச் சங்காரத்திற் சங்கரிக்கவேண்டி மகேசனுடைய சங்கரித்தல் வேட்கையால், அணுக்களில் வினை, அதனால் விபாகம், விபாகத்தாற் சையோகநாசம்; துவியணுகங் கெடுகையில் ஆசிரயக் கேட்டாற் றிரியணுகாதி நாசம். முறையே பிருதிவியாதி நாசம். எங்ஙனம்? நூற்கேட்டின் ஆடைகெட்டு அதனையடைந்த ரூபாதிகளுக்குத் தன தாசிரயக்கேட்டானே கேடு. வேறாயின், ஆசிரய மிருக்கையிலே மாறுபட்ட குணமடைதலாற் கேடு; எங்ஙனம்? பாகத்தாற் குட முதலியன ரூபாதிநாசமென்க

பரமாணு * சற்பாவத்துக்குப் பிரமாணம்யாது? கூறுதும் சாளர வெயிற்கண்ணதாகிய எல்லாவற்றினு நுண்ணியதியாதொன்று தோன்றும் அது தன்னி னுண்ணியதாகிய பரிமாண திரவியத்தாற்றோன்றுவது காரியத் திரவியமாதலில் குடம்போல அத்திரவியமுங் காரியமே; பெருந் திரவியத்தைத் தோற்றுவிப்பதற்குக் காரியத்துவ நியமத்தால் ஆதலின் இங்ஙனந் துவியணு மென்னும் வேறு திரவியஞ் சித்தம். அதுவுந் தன்னி னுண்ணியதாகிய சமவாயிகாரணத் திரவியத்தாற் றோன்றும் காரியத்திரவியமாதலில்; குடம்போல யாது துவியணுகத்தைத் தோற்றுவிப்ப ததுவே பரமாணு அதுவுந் தோன்றுததே அற்றாயின், காரியத் திரவியத்தைத் தோற்றுவிப்பதற்குக் காரியத்துவ நியமமாதலின்.

அது தோன்றாததெங்஡னம்? கூறுதும். எண்ணி றந்தகாரிய பரம்பரை யாகவன் தாதோஷம்வருதலி ன், இங்஡னமாயிற், பல திரவியத்தாற் பிறத்தல் வி சேடமின்மையின். மேருகடுகுகட்குத் துல்லிய ப ரிமாணத்துவம் வருதலின், ஆதலிற் றோன்றுததே பரமாணு. துவியணுகம் இரண்டு பரமாணுக்களா னே தோன்றும்; ஒன்றற்குத் தோற்றுவியாமை நி யமமாதலின், மூன்று முதலிய கற்பனையிற் பிரமா ணமின்மையின், திரியணுக மூன்று துவியணுகங்க ளானே பிறக்கும்; ஒன்றற்குத் தோற்றுவியாமை நியமமாதலின், இரண்டாற் றோன்றிற் காரியத்தை யடைந்த மகத்வந் தோன்றாமை வரல்வேண்டுதலி ன் காரியத்தின் மகத்துவங் காரணத்தின் மகத்து வத்தானாவது காரணப் பன்மையானாவதன்றோ? அவற்றுள் முதலதின்மையின் ஈற்றது வேண்டத்த க்கது; நான்கு முதலிய கற்பனையிற் பிரமாணமின் மையின் மூன்றினை மகத்துவந் தோன்றுதல் கூ டுதலின்

ஆகாயம் சத்த குணமுடையதாயம் சங்கி யை, பரிமாணம், பிரதக்த்வம், சையோ கம், விபாகமுடையது; ஏகம்; விபு; நித் தியம், சத்தலிங்கமுடையது அதற்குச் சத்த லிங் க மெங்஡னம்? பாரிசேடத்தால்; அங்஡னமன்றோ சத்தங் குணம்; சாமாநியமுடையதாய் நம்மனோர் புறவிந்திரியமொன்றாற் கிரகிக்கப்படுதலின்: ரூபா பாதி போல. குணமுங் குணியைப்பற்றியதே. அ தற்குப் பிருதிவியாதி நான்கு மான்மாவுங் குணியா கத்தகா; சத்தஞ் செவியாற் கிரகிக்கப்படுதலின் யா

வை, பிருதிவியாதி கு ங்கள்? அவை சுரோத்தி ரேந்திரியத்தாற் கிரகிப்பன அல் ). எங்ஙனம்? ரூபாதிகள். சத்தஞ் சுரோத்திரேந்திரியத்தாற் கிரகிக்கப்படும் திக்குக் கால மனங்களது குணமன்று' விசேடகுணமாதலின். ஆதலின் இவ்வெட்டினின்றும் வேறு ச்சத்தத்திற்கு குணியநுமிக்கப்படும் அதுவே யாகாயம். அதுவும் ஒன்று; பேதத்திற்பிரமாணமின்மையின், ஒருமையாற் கூடுதலின், ஒருமையாதலின் ஆகாயத்துவமென்னுஞ் சாமானியம் ஆ ாயத்திலில்லை; சாமானியம் பலவிடத் திருத்தலின். ஆக யம் விபு-பரமமகற்பரிமாண முடை யதென்று பொருள்; எல்லாவிடத்து ம காரியந் தோன்றுதலின். விபுத்துவத்தா னித்தியம்.

காலம். காலந் திக்கின் வேறு பரத்துவா பரத்துவத்தால் அநுமேயம். சங்கியை பரிமாணம், பிரதக்த்வம், சையோகம், விபாகமுடையது; ஒன்று; நித்தியம்; விபு அதற்குத் திக்கின் வேறான பரத்து ாபரத்துவத்தால் அநுமயத்துவம் ங்ஙனம்? கூறுதும், அ ியனு யண்மையா பரத்துவத்திற் கருகனை முதியோன் கண் வேறான பரத்துவந் தோ றும் சேயனுய்ச் சேய்மையாற் பரத்துவத்திற் கருகனை இளையோன் கண் வேறான அபரத்துவந் தோன்றும். இதிற் றிக்கின் வேறான பரத்துவமு மபரத்துவமுங் ாரியமாய்த் திக்கு முதலிய காரணமுண்டாகாமையிற் காலமே ாரணமென்றநுமிக்கப்படும் அஃது ஒ ுமயினும் நிகழ் விறப் பெதிர்வு வினை யுபாதி வ

சத்தான் நிகழ்வு முதலிய *வியபதேசத்தை யடையும் புருடனைப் போல; அவற் கடுதன் முதலிய வினையுபாதிவசத்தான் மடையன் முதலிய வியவதேச மடையும் இதற்கு நித்திய விபுத்துவங்கண் முன்போல.

**திக்கு.** திக்கு ஒன்று; நித்தியம்; விபு; சங்கியை, பரிமாணம், பிரதக்த்வம், சையோகம், விபாகமுடையது அதுவுங், கிழக்கு முதலிய ஞாநங்களா லநுமேயம்; அவற்றிற்கு வேறு நிமித்தமின்மையின் கிழக்கினும் மேற்கினும் பொருளாண்டேயிருத்தலின். அஃது ஒன்றாயினும் தன்ற றேச சையோக வுபாதி வசத்தாற் கிழக்கு முதலிய பெயர்களை யடையும்

**ஆன்மா.** ஆன்மத்துவ சாமாநியமுடைய தான்மா; சுக துக்கமுதலிய வேறுபாட்டாற் பலவே. அதுவுங் கூற்றினும். அதற்குக் குணங்கள், சங்கியை முதலிய ஐந்தும் புத்தி முதலிய ஒன்பதும் அதற்கு நித்தியத்துவ விபுத்துவங்கண் முன்போல.

**மநம்.** மநத்துவ சாமாநியமுடையது மநம். அணு பரிமாண சையோகி அகவிந்திரியம் மநம். இன்ப முதலிய உபலத்திக்குக் கரணம். சங்கியை முதலிய ஐந்து குணமுடையது பரத்துவம், அபரத்துவம் வேகமுடையது. இந்த மந சையோகத்தாற் புறவிந்திரியம் புறப்பொருள் கிரகிப்பது. அதனானே யெல்லா உபலத்திக்குஞ் சாதநம். அதுவு காட்சியன்று; மற்றென்னெனின் அநு

மானத்தாற் றேன்றுவது அங்஡னமன்றே, இன்ப முதலிய உபலத்திகள் கட்புல முதலிய அல்லாக் கரணத்தாற் சாதிப்பன, கட்புல முதலிய இன்றியுந் தோன்றலின், யாது கரணம் அது மநம். அதுவும் அணுபரிமாணம்

திரவியங்கள் கூறினும்; குணங்கள் கூறுதும்.

## குணம்.

சாமாநியமுடையது, சமவாயிகாரணம் அல்லது, வினையல்லது, குணம். அதுவும் பொருளைப் பற்றியது; ரூபம், ரசம், கந்தம், பரிசம், சங்கியை பரிமாணம், பிரதக்த்வம், சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம் திரவத்துவம், சிநேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்நம், தருமம், அதருமம், சம்ஸ்காரம் என்னும் பேதத்தா லிருபத்துநாள்கு குணமாம்.

உருவம். அவற்றுட் கட்புல மாத்திரையாற் கிரகிப்பது ரூபம் சாதியுடையது; விசேட குணம்; பிருதிவி முதலிய மூன்றன் கணிருப்பது. அதுவும் வெண்மை முதலிய பல பிரகாரம்; பிருதிவியிற் பாகசரூபம்; தேயுவில் அபாசக வெண்மையொளி; அப்புவி லொளியில்லாத அபாசக வெண்மை

இரச°. இரசம் இரசநேந்திரியத்தாற் கிரகிக்கப் படுவது; விசேட குணம்; பிருதிவி புனல் களிலிருப்பது. அவற்றுட் பிருதிவியின் மதுர முதலிய அறுவகைப் பாகசமும், அப்புவின் ம

தார மபாசகமும் நித்தியாநித்தியமாம்; நித்தியப்
பரமாணுவான அப்பு நித்தியங் காரியமான அ
ப்புவிலென்க.

கந், ங், கிரா ரத், ரற் ருங் குணப்
கந்தம. பிருதிவிமாத்தி ரயினிருப்பது அது நறு
நாற்றந் தீநாற்றமென் றிருவ புனன்
முதலியவற்றிற் கந்தந்தோன்ற சையுத்தசமவாய
த்தா லென் றறியத்தக்கது

பரிசந், துவக்கிந்திரியத்தான் மாத்திரங்
பரிசம. கிரகிக்கப்படுவது. பிருதிவியாதி நான்கினி
ருப்பது. அது தண் ம, ம்மை தண்
மை வெம்மை யில் தென்னும் பேதத்தான் மூவ
வ ;த ட ரீரில்.வெம்மைதியில் தண்மைவெ
ம்மை யில்லது பிருதிவி வாயுக் ளில் இவ்வுருவா
தி நான்கும் ம த்துலுத்தோ டொருபொருளிற் ச
மவேதித்துக்கொண் டுற்புதங்களாயே காட்சிகள்

சங்கியை, ஒருமை முதலிய வியவகாரத்
சங்கிய. தின் கார ம் சாமாநியகுணம் -ஒன்று
முதற் பரார்த்தமளவும். அவற்றுள் ஒரு
மை இருவகை; நித்த அநித்த பேதத்தான் நித்தி
யத்தை யடைந்தது நித்தியம். காரியத்தையடைந்
த தநித்தியம் தன தாசிரய சமவாயிகாரணத்தை
யடைந்தவொருமையாற் றோன்றுவது இருமைய
நித்தியமே. அதுவும், இரண்டு பிண்டங்களில் இ
தொன்றிம தொன்றென்னு மவா தற் கருத்தா
ற் றோன்றும் அவற்றுட், பிண்டங்கள் சமவாயி
காரணம் பிண்டங்களி லொரு மக ளசமவாயி
காரணம் அவாவுதற்கருத்து நிமித்த ாரணம் அ

வாவுதற்கருத்து நாசத்தானே யிருமைநாசம். இங்ஙன மும்மை முதலிய தோற்றம்.

பரி — பரிமாணம், அளவு யெவகாரத்தின் காரணம். அது அணு, மகத்து, நெடில், குறில் என நான்கு வகை. இன்னும் அது நித்த அநித்தபேதத்தா லிருவகை. நித்தியத்தைஅடைந்தது நித்தியம். காரியத்தை யடைந்த அநித்தியம். காரியத்தை யடைந்த பரிமாணங் காரணத்தை யடைந்த சங்கியாயோகி, பரிமாண யோகி பிரசயயோகி; அவை யெங்ஙனம்? துவியணுகபரிமாண மீசுவர னபேட்சாபுத்தியாற் றோன்றிய பரமாணு இருமையாற் சங்கையாற் சங்கியாயோகி சங்கியாகாரணமென்று பொருள். திரியணுகபரிமாணமுந் தனதாசிரய சமவாயிகாரணத்தை யடைந்த பன்மைச் சங்கியாயோகி. சதுரணுகாதி பரிமாணந் தனதாசிரய சமவாயிகாரண பரிமாணத்தாற் றோன்றியது. பஞ்சிப்பிரட்சி பரிமாணந் தனதாசிரய சமவாயிகாரண அவயவங்களது பிரசிதில சையோகத்தாற் றோன்றியது. பரமாணு பரிமாணமு மாகாயாதியையடைந்த பாரிமாண்டல்ய மென்னும் பரமமகற் பரிமாணமு நித்தியமே.

பிரதக்த்வ — பிரதக்த்வம் வேறென்னும் வியவகாரத்தின் காரணம்

சையோக — சையோகஞ் சையுக்தவியவகாரத்தினேது இரண்டன்கண்ணது அவ்வியாப்பிய விருத்தியது. அது வேறு வினையாற்றோன்றியது, இரண்டன் வினையாற் றோன்

றியது சையோகத்தாற் றோன்றியதென மூவகை. அவற்றுள் வேறுவினையாற் றோன்றுவதெங்ஙனம்? வினையுடைய பருந்தோடு வினையில் குற்றிக்குச்சையோகம் அதற்குப் பருந்தின் வினை யசமவாயிகாரணம். இரண்டன் வினையாற் றோன்றுவதெங்ஙனம்? வினையுடைய மல்லரது சையோகம். சையோகத்தாற் றோன்றுவதெங்ஙனம்? காரண அகாரண சையோகத்தாற் காரிய அகாரிய சையோகம் எங்ஙனம்? கைத்தரு சையோகத்தான் மெய்த்தருசையோகம்.

விபாகம — விபாகம் பிரிவின் வியவகாரஏது. சையோகமுதற்று யிரண்டன்கண் ணிருப்பது. அது வேறுவினையாற் றோன்றியது, இரண்டன்வினையாற் றோன்றியது, விபாகத்தாற் றோன்றியதென மூவகை. அவற்றுள் முதலதெங்ஙன்? மலையினின்று மெழும் பருந்தின் வினையாற் பருந்தொடு மலைக்கு விபாகம். இரண்டாவதெங்ஙன்? தகர்களது விபாகம் மூன்றாவதெங்ங ? கைத்தரு விபாகத்தான் மெய்த்தருவிபாகம்.

பரத்துவம அபரத்துவ — பரத்துவாபரத்துவங்கள், பர அபர வியவகாரத்தின் காரணங்கள் அவை திக்கான் வந்தவுங் காலத்தான்வந்தவுமென இருவகைய.

அவற்றுட் டிக்கான் வந்தவற்றது தோற்றங் கூறுதும்.

ஒரு திசையிலிருக்கும் பிண்டங்களில் இஃததனி னணித்தென்னும் புத்தியால் அநுக்கிரகிக்கப்பட்

ட திக்குப் பிண்ட சையோகத்தால், அபரத்துவம் அணியதன்கட்டோன்றும்; சேய்மைப் புத்தியாற பரத்துவம் சேயதன்கட் டோன்றும் பிண்டத்தி னுடைய அண்மை காண்பவனது டம் பபேட்சை யிறைற் சையுக்த சையோக அற்பியத்துவம்; அவற் றிர *பூபத்துவஞ் சேய்மை

காலத்தால் வந்த பரத்துவாபரத்துவங்களது தோற்றங் கூறுதும்

நியமமல்லாத திக்கினிருக்கின்ற இளையோன்மூத் தோனுடைய பிண்டங்களில் இவ னவனி னற்பகால சம்பந்த னென்னு மிவ்வகை யவாவுதற் புத்தியால் அநுக்கிரகிக்கப்பட்ட கால பிண்டங்களினுடைய சையோகத்தா லிளையோன் ணபரத்துவந் தோ றும் இவன் அ னின் மிகுந்த கால சம்பந்தமுடையனென்னும் புத்தியான் மூத்தோன்கட் பரத்துவந் தோன்றும்

குருத்துவம், முதல்வீழ்தலி னசமவாதுருத்துவம யிகாரணம் பிருதிவி புனல்களி னிருப்பது. சையோகம் வே முயற்சியின்றி குருத்துவத்தால் வீழ்தலுளதென்று கூறப்படும்.

திரவத்துவம் திரவத்துவம் முதலொழுகுதலி னசமவாயிகாரணம்; நிலந் தேயு நீரி னிருப்பது திரவத்துவம், நிலந் தியான நெய் பொன்களுக்குத் தி சயோகத்தாற் றிரவத்துவமாதலின் நைமித்தி த் திரவத்துவம் நீரின், இயற்கைத் திரவத்துவம்

சிநேகந் திரட்டுதலினை து நீரின்பாத்

சிநேகம் திரமிருப்பது காரண குணமுதற்று; கு
ருத்துவமுதலியபோலப் பொருணிற்குந்
துணையுநிற்பது

சத்தஞ் செவிப்புலனாற் கவர்வது; ஆ
சத்த காய விசேட குணம்

அற்றாயின் அதற்குச் செவிப்புலனாற் கிரகிக்கப் படுதலெங்ஙனம்? யாண்டாயினு முரசு முதலிய இடத்திற் சத்தந் தோன்றும் செவிப்புலன் புருடனிடத்தே இருக்கும்

அஃதெதாக்கும்; முரசிடத்தே தோன்றிய சத்தம் வீசிதரங்க நியாயத்தாற்றான், கதம்பமுகுள நியாயத்தாற்றான் றனக்கணித்தான சத்தந் தோற்றுவிக்கும் சத்தமுஞ் சத்தாந்தரந் தோற்றுவிக்குமென்னுமுறைமையாற் செவிப்புலனிடத்தே யிறுதிச்சத்தந்தோன்றும். அவ்விறுதிச்சத்தஞ் செவிப்புலனாற் கிரகிக்கப்படும் முதலது நடுவதுமல்ல

இங்ஙனம் வேய் பிளக்குங்கா லிரு பிளவினீக்கத்திற்றோன்றிய சத்தஞ் சத்தாந்தரந் தோற்றுவிக்கு முறையானே செவிப்புலனிறுதிச்சத்தந் தோன்றும் அவ்வீற்றிற் சத்தஞ் செவிப்புலனாற் கவரப்படும்.

முரசொலி யென்றாற் கேட்கப்பட்ட தென்னும் புத்தி மீண்டுப் பிராந்தியே முரசொலி தோன்றுமை யின் முரசாகாய சையோகமசமவாயிகாரணம் முரசு குணிற் சையோக நிமித்த காரணம். வேய் பிளத்தலாற்றோன்றிய சட சட வொலித் தோற்றத்தின், வேய் பிளவா காய சையோக மசமவாயி கார

ணம், இருபிளவினக்க நிமித்தகாரணம். இங்ஙனமுதலொலி சையோகத்தாற் றோன்றியதும் விபாகத்தாற் றோன்றியதுமாம். முதல தொழிந்திடு மொலிகள் சத்தத்தை யசமவாயிகாரணமாகவுடையன. அநுகூலவாயு நிமித்தகாரணம். சையோகத்தால் விபாகத்தாற் சத்தத்தாற் சத்தந் தோன்றுமென்று பிறருங் கூறினர். முதலது முதலான எல்லாச் சத்தங்களுக்கு மாகாயமே சமவாயிகாரணம் வினை புத்திபோல் முக்கணமாத்திர அவத்தையது. அவற்றுண் முதனடு வொலிகள் காரிய சத்தத்தாற் கெடும். ஈற்ற தீற்றயலா லீற்றய லீற்றூற் சுந்தோபசுந்த நியாயத்தாற் கெடுமென்பது பொருந்தாது; முக்கண வவத்தையான வீற்றதுடைய இரண்டாங் கணத்தி லிருப்பதான மூன்றாங் கணத் தில்லையான ஈற்றயலா லீற்றக்கேடு தோன்றல் பொருந்தாமையின் ஆதலி னீற்றயற் கேட்டானே யீற்றுக்கேடு. சத்தத்தின் கேடு நுமானத்தால். அங்ஙனமன்றோ? சத்த மநித்தியம்; சாமானியமுடையதாய் நம்மனோர் புறவிந்திரியத்தாற் கவரப்படுதலின்; குடம்போல லென்றிற் சத்தத்தினுடைய அநித்தியத்துவஞ் சாத்தியம்; அநித்தியத்துவமும் விநாசத்தோடு கூடிய சொரூபத்துவம் விநாசத்தோடுகூடியசத்தை பொருந்தாது; சத்தையில்லாத பிராகபாவத்தில் அநித்தியத்துவ மின்மை வரல்வேண்டுதலின் சாமானிய முடையதாய் நம்மனோர் புறவிந்திரியத்தாற் கிரகிக்கப்படுத லேது இந்திரியத்தாற் கிரகிக்கப்படுதலென்று கூறி லண்மாரின் வியபிசாரம்வருதலின் புற

விந்திரியமென்று கூறப்பட்டது. யோகி புறவிந்திரியத்தாற் கவர்வதான அதனோடு வியபிசாரம் வருதலின் அதை விலக்கும்பொருட்டு நம்மனோரென்று கூறப்பட்டது. யோகியுண்மையிற் பிரமாணம் யாது? கூறுதும்: பரமாணுக்களொருவர்க்குக்காட்சி; பிரமேயமாதலின். குடம்போல, யாவன் பரமாணுவைக் காண்பானவனே யோகி. அங்ஙனமாயினுஞ் சாமான்யாதிகளோடு வியபிசாரம் வருதலின் சாமான்யமுடையதாய் என்று கூறப்பட்டது. சாமான்ய முதன்மூன்றுஞ் சாமான்யமுடையவல்ல.

புத்தி — பொருள் விளக்கம் புத்தி.

சுகம் — பிரீதி சுகம்; அது, எல்லாராலு மநுகூலமாக அறியத்தக்கது.

துக்கம் — பீடை துக்கம். அது, எல்லாராலும் பிரதிகூலமாக அறியத்தக்கது.

இராகம் — இராகம், இச்சை.

துவேஷம் — குரோதந் துவேஷம்.

பிரயத்நம் — ஊக்கம் பிரயத்நம்.

புத்தியாதி யாறும் மானதக் காட்சி.

தருமம் அதருமம் — தருமாதருமங்கள் சுக துக்கங்களுக் கசாதாரண காரணங்கள். அவை காட்சியல்ல; அநுமிக்கப்படும். தேவதத்த னுடம்பு முதலிய தேவதத்தன் விசேட குணத்தாற் றோன்றியன; காரியமாய்த் தேவதத்தனுக்குப் போக ஹேதுவாதலின். அது தேவதத்தன் முயற்சியாற் பிறந்த பொருள் போலும். யாதுடம்பு முதலியவற்றைத் தோற்றுவிப்பதான ஆன்ம விசேட குணம்,

அதுவேதருமமும், அதருமமும்; முயற்சி முதலியன உடம்புமுதலியவற்றைத்தோற்றுவியாமையின்.

**சம்ஸ்காரம்** சம்ஸ்காரம்: வேகம், பாவனை, திதித்தாபகமென மூவகை.

அவற்றுள் வேகம், பிருதிவி முதனான்கினு மனத்தினுமிருப்பது; வினைக்கேது.

பாவனையென்னுஞ் சம்ஸ்காரம், ஆன்மாவின்மாத்திரையாயிருப்பது அநுபவத்தாற் றோன்றியது, நினைவிற் கேது. அதுவு மெழுந்தே நினைவைத்தோற்றுவிக்கும். எழுதல் துணையுண்டாதல்; சம்ஸ்காரிக்குத் துணைகள் ஒப்புமைகாண்டன் முதலியன.

ஒப்புத் திர்ஷ்டஞ், சிந்தைமுதலியன உள்ளுதல் வித்தையுணர்த்துவனவாமென்று பிறருங் கூறினர்.

திதித்தாபகம் பரிசம்போல விசேடித்திருப்பது. தனக்கிடமாய் வேறுரு வடிவான தனுமுதலியவற்றிற் கந்நிலைமையை மீட்டு மடைவிப்பது. இப்புத்தி முதற்றருமா தருமமீறானவையும் பாவனையும் ஆன்மவிசேட குணம்.

குணங்கள் கூறினம். கருமங் கூறுதும்.

## கருமம்.

புடைபெயர்ச்சி கருமம்; குணங்கள்போலத் திரவியமாத்திரத் திருப்பது; மூர்த்தத்துவ பரிமாணமுடைய விபுவல்லாத பொருளின் பரிமாணத்தோடு கூட ஒரு பொருளிற் சமவேதித்திருப்பது; விபாகவழியான், முதலிடத்திற் சையோக நாசத்தில்; பின்னிடத்தின் சையோகவேது; எழுதல், வி

ழுதல், முடக்கல் நீட்டல், நடத்தலென்னுங் கூறுபாட்டால் ஐவகை †சுழரண்முதலியன நடத்தலுள் அடங்கும்.

## சாமாநியம்.

அநுவிருத்தி ஞாநவேது சாமாநியம்; திரவிய முதன்மூன்றினிருப்பது. சாமாநியம், நித்தியம், ஏகம், அநேகாநுகதம்.

அதுவும் பரமெனவும், அபரமெனவும் இருவகை. அவற்றுட் பரஞ் சத்தை; பலவிடயமாதலின். அ.துவும் அநுவிருத்தி ஞாநமாத்திரமேதுவாதலிற் சாமாநிய மாத்திரம், அபரந் திரவியத்துவ முதலிய; அற்ப விடயமாதலின். அதுவும் * வியாவிருத்திக்கும் ஏதுவாதலிற், சாமாநிய விசேடம். இதில் வியத்தியின் வேறல. சாமாநியமில்லையென்றொருவன் கூறினால்; இதிற் கூறுதும்: ஆயிற் பின்னமாய் வேறுபட்ட இலக்கணமுடைய பிண்டங்களின் ஏகாகார புத்தியெல்லாவற்றினுமடைந்த வொன்றனையே யல்லாமல் யாதைப் பற்றி நிற்கும்? அதுவே சாமாநியமென்க. அற்றேயின் தானல்லதினீக்கத்தாற் பண்ணப்பட்டதே அவற்றுள் ஏகாகாரபுத்தியாக

† உட்சேபணம், அவட்சேபணம், ஆகுஞ்சநம், பிரசாரணம், கமநமென வடநூலிற் கண்டன இங்ஙனமுறையே எழுதல், விழுதல், முடக்கல், நீட்டல், நடத்தலென மொழிபெயர்க்கப்பட்டன.

* வியாவிருத்தி - நீக்கம்.

ஆதலி னிங்ஙனந் திரவியாதி யறுபொருளுங் கூறப்பட்டன. அவை விதிமுகஞானத்தால் அறியப்படுதலிற் பாவரூபங்களே.

### அபாவம்.

இப்பொழுது நிஷேதமுகப் பிரமாணத்தால் அறிவதாகிய அபாவமான ஏழாம்பதார்த்தங் கூறுதும்.

அவ்வபாவம் சமுசர்க்காபாவமெனவும், அந்யோந்யா பாவமெனவும் வகையானிரண்டு.

சமுசர்க்காபாவம் பிராகபாவமும், பிரத்துவம்சாபாவமும், அத்தியந்தாபாவமுமென மூவகை.

உற்பத்திக்கு முன் காரணங்களிற் காரியமின்மை பிராகபாவம். எங்ஙனம்? நூல்களில் ஆடையில்லை; அஃதநாதி; தோற்றமின்மையின். கெடுவதுங் காரியமே; அதன் கேடாதலின்.

தோன்றிய காரியத்திற் காரணங்களின்மை பிரத்துவம்சாபாவம் கெடுதலென்னுமளவு. எங்ஙனம்? குடமுடைகையி லோட்டிற் குடமில்லை. கோலானடித்தன் முதலியவற்றாற் பிறப்பது அது தோன்றுவதாயினுங் கேடில்லது; கெட்டது மீண்டுந் தோன்றாமையின்.

முக்காலத்து மின்மை யத்தியந்தாபாவம். எங்ஙனம்? வாயுவி லுருவமில்லை.

அந்யோந்யாபாவந் தாதான்மியத்தைப் பிரதியோகியாக வுடைய அபாவம். எங்ஙனம்? குடமாடையன்று இங்ஙனம் அருத்தங்கள் கூறப்பட்டன.

அற்றாயின் ஞானத்தினும் பிரமத்தினும் வேறான

பொருளில்லையெனின் இங்ஙனமன்று; அருந்தங்
ள் காட்சியான் மறைக்கப்படாமையின்.

## 4. புத்தி.

புத்தி, ஞாநம், உபலத்தி பிரத்யயமென்பன முதலிய பரியாயச் சொற்களால் யாது கூறப்படும் அது புத்தி. புத்தி பொருள் விளக்கும். அது அநுபவமும் ஸ்மரணமுமென வகையான் இரண்டு.

அநுபவம் யதார்த்தமும் அயதார்த்தமுமென இருவகை

அவற்றுள் யதார்த்தமாவது அவிசம்வாதமாய்க் காட்சிமுதலிய பிரமாணங்களாற் றோன்றுவது. எனம்? குற்றமில்லாத கட்புலமுதலியவற்றாற் குடமுதலிய ஞாநம்; புகையை இலிங்கமாகவுடைய தீ ஞாநம்· ஆவொப்புமை காண்டலா லாமாவென்னுஞ் சத்தவாச்சிய ஞாநம். "சோதிட்டோமத்தாற் றுறக்கம்வேண்டியான் வேட்க" வென்பது முதலிய வாக்கியத்தாற் சோதிட்டோமத்திற்குத் துறக்கசாதநத்து ஞாநம்

அயதார்த்த மருத்தத்தை நீங்கினது அப்பிரமாணத்தாற் றோன்றுவது. அது சமுசயம், தருக்கம் விபரியயமென மூவகை. சமுசய தருக்கங்கண் மேற் கூறுதும். விபரீத மஃதல்லதின் கண் கண்கவர்ச்சி பிரமமென்னு மளவு எங்ஙனம்? முன்னர்த்தோன்றும் வெள்ளியல்லாத இப்பியின் இது வெள்ளியென்று வெள்ளி வருவித்தல்.

ஸ்மரணமும் யதார்த்தமும் அயதார்த்தமுமெ

ன இருவகை. யதார்த்தம் நனவில். கனவிலெல்லா ஞானமும் அயதார்த்த ஸ்மரணம்; குற்றவசத்தால் அதுவென்புழி யிதுவென்பது தோன்றலின். எல்லா ஞானமு நிராகாரமே. ஞானத்தில் அருத்தத்தாற் றனதாகாரந் தோன்றுமென்பதன்று. சாகாரஞான வாத நிராகரித்தலின். அதலினானே ஞானாகாரத்தால் அருத்தானுமானமுந் தள்ளப்பட்டது. குடமுதலியனகாட்சியாதலின். எல்லாஞானமும் அருத்த, தாற் கூறப்படுவன. அது பொருளோடு கூடியே மனத்தால்அறியப்படுதலின் நான் குடஞானவானெ ன் றிவ்வளவுந் தோன்றும். ஞானமாத்திரவான் நானென்று தோன்றுது.

## 5. மநம.

அகவிந்திரியம் மனம். அதுவுநு கூறினும்.

## 6 பிரவிருத்தி

பிரவிருத்தி தருமாதருமங் ள். பிரவிருத்தி ச வியவகாரத்தின் காரணமாதலின்

## 7. தோட்டம்

தோஷ ம இராகத்துவேஷ மோகங்கள. இரா ம இச்சை த்வேஷம், குரோதம் மோகம், பொய்ம் மையறிவு விபரியயமென்னு மளவு

## 9. பலம்.

பலம் போகம்; சுக துக்க அநுபவம்.

## 10. துக்கம்.

துக்கம் பீடை; அதுவுங் கூறினும்.

## 11. அபவர்க்கம்.

அபவர்க்கம் மோக்கம். அதுவும் இருபத்தொருவகைத் துக்க முழுதுங் கெடுதல். இருபத்தொருவகை: உடம்பு, ஆறிந்திரியங்கள், ஆறு விடயம், ஆறு ஞானம், சுக துக்க மென்பனவே. இங்ஙனங் கௌண முக்கிய பேதத்தாற் சுகந் துக்கத்தோடு கூடலிற் றுக்கமென் றுபசரிக்கப்படும். கூட்டம் நீங்காதிருத்தல். இவ்வுபசாரம், தேன் விடத்தோடு கூடிற் றேனும் விடக்கூற்றில் வைத்தல் போல. அவ்வபவர்க்க மென்ன முண்டாமெனிற் கூறுதும். நூலா லறியப்பட்ட யதார்த்த சொரூபமுடையனும் விடயக் குற்றங் காண்டலால் விரத்தியாய் விட்டுப் போகைபுடையனுந் தியான பரிபாக வசத்தாற் றோன்றின வான்மா வுடையனுக் கிலேசநீக்கினவனுக் நிட்காம கருமா நுட்டானத்தால் வருவதான தருமாதரும மீட்டாதவனும் முன்னடைந்த தருமாதருமக்கூட்டத்தை யோகப் பெருமையா லறிந் தொருங்கு நுகர்வானுக்கு முன்னர்க் கரும நிவிர்த்தியி னிகழ்கின்ற உடம்பு நீக்கத்தில், வருமுடம்பின்மையின். இருபத்தொரு துக்கஞ் சம்பந்தமுண்டாகா; காரணமின்மையின். இருபத்தொரு துக்கக் கேடு மோக்

கம். அது, அபவர்க்கம். இனிச் சம்சயங் கூறுதும்.

௩. சம்சயம்.

ஒரு தருமியின் மாறுபட்ட பலபொருண் ஞானஞ் சம்சயம் அது மூவகை.

ஒன்று, விசேடங் காணுதிருக்கையிற் சமாந தருமதரிசநத்தாற் றோன்றியது. எங்ஙனம்? குற்றியோ மகனோவென்று முன்னிற்கு மொரு பொருளின்கண்ணே குற்றிமை துணிவிக்கும் வளைவு பொந்து முதலியன. மகன்மை துணிவிக்குந் தலை கை முதலியனவென்று விசேடங் காணுனுய்க் குற்றி மகற் கொத்த வுயர்ச்சி வடிவு காண்பானு மகற்கு, இவ்வுருக் குற்றியோ மகனோவென்று சம்சயமுண்டாம்.

இரண்டாஞ் சம்சயம் விசேடங் காணுதிருக்கையில் விபாதத்தாற் றோன்றுவது. இச்சொல் நித்தியமோ அநித்தியமோவென, ஒருவன் சொல் நித்தமென மற்றொருவன், அநித்தமென்னில்: அவரது விவாதத்தால், விசேடங் காணுத நடுவிருந்த மகற்கு, இச்சொல் நித்தியமோ அல்ல தநித்தியமோவென்று, சம்சயமுண்டாம்.

அசாதாரண தருமத்தாற் றோன்றிய சம்சயமெங்ஙனம்? நித்திய அநித்தியத்தி னங்ஙின நிலமாத்திரத் திருப்பதான அசாதாரண தருமமான மணமுடைமையால் விசேடங்காணுனுக்கு நிலத்தி னித்தியாநித்தியத்துவ சம்சயமுண்டாம் அங்ஙனமன்றோ, எல்லா நித்திபத்துவநீங்கின மணமுடைமையோடு கூடுதலின் நிலம் அநித்தியமோ அல்ல

லது எல்லா அநித்தியத்துவ நீங்கின வதனோடு கூடுதலின் நித்தியமோவென்று சமசயம்

## ச. பிரயோசநம்.

எதனுலேவப்பட்டு மகன் முயலாநின்றுன். அது பிரயோசநம். அது சுகமடைதல் துக்கக்கேடு. வாளாவிருப்பாற்கு அதின்பொருட்டன்றோ முயற்சியும்

## ரு. திட்டாந்தம்.

வாதி பிரதிவாதிகட் குடம்பாட்டு விடயமான அருத்தந் திட்டாந்தம். அது இருவகை ஒன்று சாதருமி திட்டாந்தம் எங்ஙனம்? புகையுடைமையேதுவின்கணட்டில். இரண்டாவது வைதருமி திட்டாந்தம் எங்ஙனம்? அவ்வேதுவிற்கே மடு

## சு. சித்தாந்தம்.

பிராமாணிகத் தன்மையாலுடம்படு மருத்தஞ் சித்தாந்தம். அது சர்வதந்திரம், பிரதிதந்திரம், அதிகரணம், அபியுபகமமென நால்வகை.

அவற்றுட் சர்வதந்திர சித்தாந்த மெங்ஙனம்? தருமிமாத்திர வுண்மை.

இரண்டாவ தெங்ஙனம்? நையாயிகர்க்கு மநமிந்திரியம். அதுவுஞ் சமாந தந்திரமான வைசேடிகத்திற் சித்தம்

மூன்றாவ தெங்ஙனம்? நில முதலானவற்றின் கருத்தாச் சித்திக்கையி லவனுக்குச்சர்வஞ்ஞத்துவம்.

நான்காவ தெங்ஙனம்? சைமினியினுடைய சித்

தியா நித்திய விசார மெப்படியாயினுமாகச் சத்த ங் குணமென்பது.

எ. அவயவம்.

அநுமாந வாக்கியத்தினுடைய ஏகதேசங்களவயவங்கள். அவை பிரதிஞ்ஞை முதலாயினவை. அங்ஙன நியாயசூத்திரமும்; பிரதிஞ்ஞை யேதுவுதாரண உபநய நிகமநங்க ளவயவங்கள்.

அவற்றுட் சாத்தியதரும விசிட்ட தருமிப் பிரதிபாதக வசநம், பிரதிஞ்ஞை. எங்ஙனம்? இம் மலை தீயுடைத்தென்பது.

பஞ்சமி யந்தமான லிங்கப் பிரதிபாதக வசநமே து எங்ஙனம்? புகையுண்மையினென்பது.

வியாத்தியோடு கூடின திட்டாந்த வசந முதாகரணம். எங்ஙனம்? யாது புகையுடைத்து அது தீயுடைத்து; எங்ஙனம்? அட்டில் என்பது பக்கத்தில் இலிங்கத்தி னுபசங்கார முபநயம் எங்ஙனம்? இதுவும் புகையுடைய தென்பது. பக்கத்திற் சாத்தியத்தி னுபசங்கார நிகமநம் எங்ஙனம்? ஆகையாற் றீயுடையதென்பது. இப் பிரதிஞ்ஞை முதலைந்தும் அநுமாந வாக்கியத்தின் பஞ்சாவயவங்கள்; அவயவம் போல. அவயவங்கள் சமவாயிகாரணமல்ல; சத்தமாகாயத்திற் சமவேதித்திருக்கையால்

அ. தருக்கம்.

அநிட்டப்பிரசங்கந்தருக்கம். சித்தமான வியாத்தியையுடைய தருமங்களுள் வியாப்பிய வங்கிகா

ரத்தால் வியாபகத்தின் வரவு. எங்ஙனம்? கண்டுங்
கடமுண்டாயி னெப்போது நிலம்போலக் காணப்ப
டுமென்பது. இத் தருக்கம் பிரமாணத்துக் கநுக்
கிராகம். அங்ஙனமன்றே இம்மலை தீயுடையதோ
இல்லதோவென்று ஐயத்தின் பின், ஒருவன்
தீயில்லதென்று கருதின் அப்போதவனைக் குறி
த்துத் தீயில்லதாயினதனாற் புகையில்லதுமாக
வேண்டுமென்று புகையில்லாமையின் வரவுபண்
ணப்படும். அதுவே தருக்கம்.—அநிட்டப்பிரசங்
கமென்றுஞ் சொல்லப்படும். இந்தச் சாத்திய அ
பாவமான ஆரோபம் நிகழ்ந்த தர்க்கத்துக்கு விடய
ம்; தீயில்லாமையைத் தருதலால். ஆதலில் அநு
மானத்துக் கநுக்கிராகம். தருக்கஞ் சமுசயத்தி ல
டங்குமென்றொருவன் சொல்வான் அது பொருந்
தாது; ஒரு சார்பையுடைய விடயத்தை யுடைய
தாகையால்.

## ௯. நிர்ணயம்.

அவதாரண ஞானம் நிர்ணயம். அது பிரமாண
பலம்

## ௰. வாதம்

* தத்துவமறியவேண்டுவான் கதை வாதம். அ
து எட்டு நிக்கிரகங்கட் கதிகரணம். அட்ட நிக்கிர
கங்களாவன: நியூநம், அதிகம், அபசித்தாந்தம்,
ஏத்துவாபாச பஞ்சகம்.

று மிச்சையுடையான் கதை சற்பம். அது எல்லா த்திப்பிரகத்தினை கிடைத்ததிற் கதிகாரணம். பராபட்சத் தூஷிக்ப்படுகையிற் சுபட்ச சாதநாபிரயோக முடிவாயுள்ளது சற்பம்.

## ௰௨. விதண்டை.

சுபட்ச தாபகஹீநமாய்ப் பரபட்ச தூஷண மாத்திர முடிவாயுள்ள கதை விதண்டை. இவ் வைதண்டிகளுக்குப் பட்சமில்லை, சொல்வார் பலரை யுடையதாய்ப் பூர்வோத்தர பட்சத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியக்கோவை கதை.

## ௰௩. ஏத்துவாபாசம்.

சொல்லப்பட்ட பக்கத் தருமத்துவ முதலான ரூபங்களுளொரு ரூபத்தாற் குறைந்தாலு மேது வல்ல. அதுவுஞ் சில ரூப யோகத்தால் ஏதுவைப் போலத் தோன்ற ஏதுப்போலிகளாம் அவை: அசித்தம், விருத்தம், அநைகாந்திகம், பிரகரணசமம், காலாத்தியாபதிட்டமென்னும் பேதத்தாலைவகை.

### 1. அசித்தம்

இவற்றுள் உதயநனால் "வியாத்தமான ஏதுவினுடைய பக்கதருமதையின் ஞானஞ் சித்தி; அதனுடைய அபாவம் அசித்தி" யென் றசித்த லக்கணஞ் சொல்லப்பட்டது. அதுவும் விருத்தமுதலானவற்றினு முண்டென்று சாங்கரியந் தோன்றுகின்றது; ஆயினு மெவ்வாறு சாங்கரியமின்று மவ்வாறு சொல்லப்படுவா யாதெச் சாதநத்தின் முன்னே தோன்றந் தோஷ ஞானத்தில் சமர்த்தமா

ட்பொருளிலேயே என்னுடையதாயிருக்கையிற் கடத்திலே அநித்தியத்துவத்துக் கையமில்லை: நிச்சயத்தினாலே; சொரூபத்தாற் கடமிருப்பினும் அநித்தியத்துவ சந்தேகமின்மையால் ஆசிரயமில்லையென்ப தாசிரயாசித்தம் ஏது அல்லது; இது ஆசிரயமுடைய தன்றென்பதனால்.

எவ்வேது வாசிரயத்தி லறியப்படாதது சொரூபாசித்தம் எங்ஙனம்? சாமானியம் அநித்தியம்; காரியத்துவத்தாலென்பது. காரியத்துவ வேது வாசிரயமான சாமானியத்திலில்லை. பாகாசித்தமுஞ் சொரூபாசித்தமே; எங்ஙனம்? பிருதிவிமுதலான நான்கின பரமாணுக்களும் அநித்தியம்; கந்தமுடைமையாலென்பது. கந்தமுடைமை பக்கமாகு மெல்லாவற்றினுமில்லை; பிருதிவிமாத்திரத் திருத்தலின். அதனின் ஒருகூற்றிலே சொரூபாசித்தம்.

அப்படியேவிசேடணாசித்தம், விசேடியாசித்தம், அசமர்த்த விசேடணாசித்தம், அசமர்த்த விசேடியாசித்தம்முதலானவை சொரூபாசித்தபேதங்கள்.

அவற்றுள் விசேடணாசித்த மெங்ஙனம்? சத்தநித்தியம். திரவியமாய்ப் பரிசமில்லாமையுடைமையின் என்பது. இங்கே திரவியத்துவ விசிட்ட பரிசமில்லாமை யுடைமை யேது பரிசமில்லாமை மாத்திர மன்று. சத்தத்திற் றிரவியத்துவமுமில்லை; குணமாதலால் ஆதலால் விசேடணாசித்தம்; திரவியத்துவமென்னும்விசேடணமில்லாமையால். அதனோடு கூடிய பரிசமில்லாமையுமில்லை; விசே

ணத்தினின்மையால் விசிட்டமு மில்லாமையால், எங்ஙனம்? புருடனுண்டாயுந் தண்டமின்மையிற் றண்ட விசிட்ட புருடனிலனே. ஆதலாற் பரிச மில்லாமை யுடைத்தாயினும் விசிட்ட ஏதுபாவத்தாற் சொரூபாசித்தமாம்.

விசேஷ்யாசித்த மெங்ஙனம்? சத்த நித்தியம்: பரிசமின்மையாய்த் திரவியத்துவத்தையுடைமையால் என்பது. ஈண்டும் விசிட மேது; விசேடியமில்லாமையால் விசிட்ட சொரூபமில்லை.

அசமர்த்த விசேஷணாசித்த மெங்ஙனம்? சத்த நித்தியம் குணத்துவமுடையதாய்க் காரணபாவத்தையுடைமையால் என்பது. இங்கே விசேடணத்திற்குச் சிறிதுஞ் சாமர்த்தியமில்லை; விசேடியமான காரணபாவத்திற்கே நித்தியத்துவத்தைச் சாதிக்க வலியுண்மையால் ஆதலா லசமர்த்தம் விசேடணம்; சொரூபாசித்தமென்பது விசேடணபாவத்தில் விசிட்டமின்மையால். அற்றாயின், விசேடணமான குணத்துவஞ் சத்தத்திலிருக்கின்றதே எப்படி விசேடணமில்லை? அஃதொக்கும்; குணத்துவ முண்மையே; ஆயினு மது விசேடணமான ஸ்வசாத்தியத்தைத் தருதலென்னும் பயனுடையதன்றே யேதுவுக்கு விசேடணமாம்; குணத்துவம் பயனுடைத்தன்று — அசமர்த்தமென்று சொல்லப்பட்டதே

அசமர்த்த விசேஷ்யாசித்த மெப்படி? இதிலே முன்பின்னான பிரயோகம் சத்த நித்தியம்; அகாரணத்துவமுடையதாய்க் குணத்துவமுடைமையா

ல் என்பது. இங்கே விசேடண மாத்திரமே வித்தி யத்துவத்தைச் சாதித்தலின் வெளிப்படையது. விசேடிய மசமர்த்தம்; சொரூபாசித்தமென்பது, விசேடியாபாவத்தால் விசிட்ட மின்மையால் விசிட்ட மேதுவாய்க் கொண்டமையால். ஒழிந்தது முன் போல.

எங்கே வியாத்தி பயிரப்படாதது வியாப்பியம் வியாப்பியத்துவாசித்தம். அம் திரூவ துவாசித்தம் கை; ஒன்றுசாத்தியத்துடனே யுடனி கழ்ச்சிய தில்லாதது. மற்றொன்று சோபாதிக சாத்திய சம்பந்தமுடையது.

அவற்றுள் முதல் தெங்ஙனம்? யாது சத்து அது கணிகம். எங்ஙனம்? சலதர படலம் விவாத பதமாகிய சப்தாதியுஞ் சத்து. இங்கே சப்தாதி பக்கம் கணிகத்துவஞ் சாத்தியம்; சத்துவ மேது. இவ்வேதுவுக்குக் கணிகத்துவத்தோடு வியாத்தி யிற் பிரமாணமில்லை.

இரண்டாவ தெங்ஙனம்? ருப்பத்தினிரு க்கு மத்திரிதநயன் கரியன்; மைத்திரி மகன்மையா ல்; காணப்பட்ட மைத்திரி தநயர் கூட்டம்போல. இங்கே மைத்திரி மகன்மையாற் கருமை சாதிக்க ப்படும். மைத்திரி மகன்மை கருமையிற் பிரயோசக மன்று. மற்றென்னெனிற் சாகாதி யாகார பரிணதியே பிரயோசகம். பிரயோசக முபாதியென் றுகூறப்படும் ஆதலான் மைத்திரி மகன்மைக்குக் கருமைச் சம்பந்தத்தில் சாகாதியாகாரப் பரிணமமே யுபாதி அது வெங்ஙனம்? நீக்கப் ப

கைச்சம்பந்தத்தில் ஈரவிறகின் சம்யோகமுபாதி.
ஈண்டு உபாதி சம்பந்தத்தால் வியாத்தி யில்லையெ
ன்பது; மைத்திரி மகனாயினா னென்று மேது
வியாப்பியத்துவாசித்தம். யாகத்துட்பட்ட கொலை
மை யதன்மசாதகம்; கொலைமையால்; யாகப்புற
த்துக் கொலைமை போல. ஈண்டுக் கொலைமை யத
ன்மசாதகத்தின்கட் பிரயோசகமன்று. மற்றென்
னை? நிஷித்தத்வமே யுபாதியென்பது. முன்போ
ல ஈண்டு முபாதியுண்மையாற் கொலைமை யேது,
வியாப்பியத்துவாசத்தம். அற்றாயின் சாதனாவி
யாபகமாய்ச் சாத்திய வியாபகமாவது யாதது வு
பாதியென்ப துபாதியிலக்கணம். அது நிஷித்தத்
வத்தில்லை. அஃதெங்ஙனம் உபாதி? இங்ஙன
மன்று, நிஷித்தத்வத்து முபாதியிலக்கணமுண்மை
யால் அங்ஙனமன்றோ, சாத்தியமான அதன்மசா
தகத்துவத்துக்கு வியாபக நிஷித்தத்வம். எங்கே
யெங்கே யதன்மசாதகத்துவமங்கேயங்கே நிஷித்
தத்வத்தி னிருப்புண்மையால்; எங்கே யெங்கே
கொலைமை யங்கேயங்கே நிஷித்தத்துவமவசியம
ன்று யாகத்திற் கங்கமான கொலையில் வியபிசார
த்தினால். யாகவங்கமான கொலையிற் கொலைமை
யுண்டு நிஷித்தத்வமில்லை

இப்படியே மூன்றசித்தங்களுங் காட்டப்பட்டன.

## 2 விருத்தம்.

சாத்தியத்தின் விபரீதத்தோடு வியாத்தமான
ஏது விருத்தம். எங்ஙனம்? சத்தம் நித்தியம், காரி
யத்துவத்தால் என்பது. இங்கே நித்தியத்துவஞ்

சாத்தியம்; அதனுடைய மாறுபாடான அநித்தியத்தோடு காரியத்துவ வியாத்தம் யாது காரிய மஃது அநித்தியமே.

ஆதலால், சாத்திய விபரீதத்தை வியாபித்தலால் காரியத்துவ ஏது விருத்தமாகும்.

### ௨. அனைகாந்திகம்

சம்சய ஏது அனைகாந்திகம்—வியபிசாரத்தோடேகூடின ஏதுவு மனைகாந்திகமாம். அது சாதாரணம் அசாதாரண மென இருவகை. அவற்றுள் முதலாவது பக்ஷ சபக்ஷ விபக்ஷ விருத்தி; எங்ஙனம்? "சத்தம் நித்தியம், பிரமேயத்துவத்தால்" என்பது பிரமேயத்துவ ஏது பக்ஷமான சத்தத்தினுஞ் சபக்ஷமான நித்தியத்தினும் விபக்ஷமான அநித்தியத்தினு மிருக்கின்றது எல்லாம் பிரமேயமாதலால் இரண்டாவது சபக்ஷ விபக்ஷங்களினில்லாதது; எங்ஙனம்? "நிலம் நித்தியம், கந்தமுடைமையால்" இங்கே கந்தமுடைமையேது, சபக்ஷமான நித்திய வியோமாதியினின்றும் விபக்ஷமான அநித்திய சலாதியினின்றும் நீங்கினது கந்தமுடைமைக்கு பிருதிவிமாத் திரத்திருப்புண்மையால்.

உண்டாகிய சபக்ஷ விபக்ஷமுடைய ஏதுவுக்குச் சபக்ஷத்திலிருந்து விபக்ஷத்தினீக்கமாய் நிற்றலே நியமமாய்க், கமகாங்கத் தன்மையிலொன்றாகிய மையாமையே வியபிசாரம். அது இருவகையாற்கூடும் சபக்ஷ விபக்ஷத்தி லிருத்தலானு மவற்றினில்லா மையானும்.

4. பிரகரணசமம்.

யாதுக்குப் பிரதிபட்சமான வேறொரு மேது வுண்டதுவே பிரகரணசமம் சற்பிரதிபட்சமென்றுஞ் சொல்லப்படும். எங்ஙனம்? சத்தநித்தம்; அநித்திய தருமந் தோன்றாமையாலென்பது. இங்கே விபரீதார்த்தத்தைச் சாதியாநின்ற சமானபலமாகிய வேறநுமானம் பிரதிபட்சமென்று சொல்லப்படும். யாது து ்லியபலமன்றதுபிரதிபட்சமன்று அங்ஙனமன்றோ, விபரீதத்துக்குச் சாதகமான வநுமானம்: உபசீவியம், உபசிவகம், அநுபயம் என மூவகையாம். அவற்றுண் முதலது வாதகம்; வலிமையையுடையதால். எங்ஙனம்? பரமாணுக்ளநித்தியம் மூர்த்தமாகையால்; கடம்போல பிரயாணத்தாற் கிரகிக்கப்படாத தருமியான பரமாணுக்களின் அநித்தியத்து வாநுமானங் கூடாது; ஆசிரயாசித்தியால். இவ்வநுமானத்தாற் பரமாணு கிரகிப்புக்குப் பிரமாணியமறியப்பட்டது; அன்றி யிதற்குத் தோற்றமேயில்லாமையால் ஆ லால் உபசீவியம் வாதகமே. உபசிவகந் துற்பலமானதால் வாத்தியம். எங்ஙனம்? இந்த வநித்தியத்து வாநுமானமே. மூன்றாவது சற்பிரதிபட்சம் துல்லியபலத்தால்.

5. காலாத்தியயாபதிஷ்டம்

எதற்குப் பிரத்தியட்சாதி பிரமாணத்தாற் பக்கத்திற் சாத்தியாபாவ பரிச்சி ானம், அது காலாத்தியயாபதி டம் பாதிதவிடயமென்றுஞ் சொல்

லப்படும் எங்ஙனம்? தீ வெம்மையில்லது பதார்த்தத்வத்தால்; சலம் போல. இங்கே பதார்த்தத்வம் வது. அதற்குச் சாத்தியம் வெம்மையில்லது, அதனுடைய அபாவங் காட்சியானே பரிச்சின்னம்' துவக்கிந்திரியத்தாற் றீயினது வெம்மையில்லாம தள்ளப்படுகையால். இன்னுங் காலாத்தியயாபதிட் டமெங்ஙனம்? கணிகத்துவஞ்சாதிக்கின்றபோது முன் சொன்ன சத்துவவேது. எங்கே கணிகத்துவம் சாத்திய மதனுடைய அபாவமாகிய அக்கணிகத்துவம் பிரத்தியஷிஞானபிரத்தியட்சத்தினாலே பரிச்சின்னம் பாதிதன்றான் முன்னமறியப்பட்டது, அதுவே யிக்கடமென்று பூருவ அநுபவத்தாற் சநித்த வாசனையோடு கூடிய விந்திரியத்தாற் பிறந்து பூருவாபர காலத்தை யடைந்த பிரத்தியஷிஞானத்தாற் கடத்துக்கு நிலைமை துணியப்படும்

இந்த அசித்த முதலான அஞ்சு மேதுப்போலிகள்; பக்ஷ தருமத்துவ முதலான ரூபஙீநத்துவத்தாலேதுவல்லன. தஞ் சாத்தியத்தைச் சாதியாதன விலக்கணமாகுங் கேவலவியதிரேகியினுடைய அதிவியாத்தி யவ்வியாத்தி யசம்பவங்களு மிவற்றடங்கும்' இவ்வைந்தினு மதிகமல்ல.

அதி வியாத்தியுடையது வியாப்பியத்துவாசித்தம்' விபக்கத்திநிக்கமில்லாமையால்' சோபாதிகத்துவத்தாலும். எங்ஙனம்? கோவிலக் ணமென்னும் பசுத்துவ நதுக்கு, அலைதாடி முதலான வுண்மை பிரயோசகம்

அவ்வியாத்திக்குப் பாகாசித்தம். எங்ஙனம்? கோவிலக்கணமென்னுஞ் சித்திர வன்னமான அலை தாடி. அசம்பவஞ் சொரூபாசித்தம்; கோவிலக்கணமான ஒரு குளம்புடைமை

௰௬. சலம்.

தாற்பரியம் வேறுபடச் சொல்லுஞ் சொல்லுக்குப் பொருள் வேறு கற்பித்துத் தூடணஞ் செய்லுதல், சலம். எங்ஙனம்? நூதன தாற்பரியத்தாற் சொல்லப்பட்ட நவகம்பளமுடையானிம் மைந்தனென்னும் வாக்கியத்திற்கு வேறு பொருளாயாசங்கித்தொருவன், இவனுக்கு நவகம்பளங்களில்லை வறுமையால் இவனுக்கிரண்டாயினுமில்லை எங்ஙனமொன்பதென்று தூடியாநின்றான் இவ்வாதி சலவாதியாதலாற் றோற்றவன்

௰௭. சாதி.

அசத்தான உத்தரஞ் சாதி—உற்கருஷ்சமா அபகருஷசமை முதலான பேதத்தாற் பலவகை. பெருகுமென்னும் பயத்தாலெல்லாஞ் சொல்லப்பட்டனவல்ல. அவற்றுளவ்வியாத்தமான திட்டாந்த தருமத்தாற் சாத்திய அவ்வியாபகத் தருமத்தை வருவித்த லுற்கருஷசமையென்னுஞ் சாதி எங்ஙனம்? சத்தமநித்தியம் காரியத்துவத்தால்; கடம்போலவென்று சொல்லுதற்கண் ஒருவனிங்ஙனஞ் சொல்லாநின்றான், காரியத்துவஹேதுவாற் கடம்போலச் சத்த மநித்தியமாயின் அந்த ஹேதுவாலே அதுபோலவே சத்தஞ் சாவயவமா

கவேண்டுமெனு. அவ்வியாத்தமான திட்டாந்த தருமத்தால் அவ்வியாபகமான தருமத்தின் பாவத்தை வருவித்தல் அபகருஷசமையென்னுஞ் சாதி. எங்ஙனம்? முன்சொன்ன அநுமானத்தில் ஒருவன் இங்ஙனஞ் சொல்லாநின்ருன், காரியத்துவவேதுவாற் கடம்போலச் சத்தம் அநித்தியமாயின் அந்த வேதுவாற் கடம்போலச் சத்தமுஞ் செவியாற் கவரப்படாததாகவேண்டும்' கடஞ்செவியிற் கவர்வதன்றேயெனு.

## ௰சு. நிக்கிரகத்தாநம்

தோல்வியேது நிக்கிரகத்தாநம் அது நூநம், அதிகம், அபசித்தாந்தம், அர்த்தாந்தரம், அப்பிரதிஞை, மதாநுஞ்ஞை, விரோதம் முதலாக பேதத்தாற் பலவிதமாயினும் பெருகுமென்று சொல்லப்பட்டனவல்ல. சொல்லவேண்டிய பொருளிற் சிறிது குறைதல் நூநம். சொல்லவேண்டியபொருளினதிகம் அதிகம். சித்தாந்தத்தின் கேடு, அபசித்தாந்தம். பிரகிருதத்திற் சம்பந்தமான பொருளுடைய சொல் லர்த்தாந்தரம் உத்தரத்தினது தோன்ருமை அப்பிரதிஞை. தனக்குப் பிரதிகூலமாய்ப் பரனுக்குச் சம்மதமான வர்த்தத்தைத் தானேயங்கீகரித்தல் மதாநுஞ்ஞை. இட்டார்த்தபங்கம் விரோதம். ஈண்டு மிகவும் வேண்டாமையாகிய நூப பேதங்களுக்கிலக்கணங்கூருமை குற்றமன்று.

தர்க்கபாஷை முற்றியது

# தர்க்கபாஷையின்

# அருமபதவிளக்கம

அசத்-இன்மை

அசமவாயி-சமவாயிகாரணமல்லாதது.

அசித்து சித்தியில்லாதது.

அட்டில்-அடுக்களை

அடகு-இலைக்கறி.

அதன்மசாதனம்-தருமமல்லாதசெயல்

அதிகரணம் - அநுமேயத்தோடு தொடர்ந்தது.

அதிதேசம்-உபமை காட்டியுணர்த்துதல்.

அதிப்பிரசங்கதோஷம் மிகைபடக்கூறலென்னுங் குற்றம்.

அதீந்திரியம் - இந்திரியத்திற்கெட்டாதது, இந்திரியத் தயதிக்ரமித்தது

அந்வயம்-உடன்பாடு இயைபு, பொருட்கியையச் சொற்களைச் சேர்த்தல்.

அந்விதம்-கூடி வருவது, தொடர்ந்துவருவது

அநவஸ்தை-முடிவுபெறுமை

அநிச்சிதம் - நிச்சயிக்கபபடாதது

அநுகதம்-நிச்சயிக்கப்பட்டது.

அநுகூலம்-உறவானது.

அநுபயம் இரண்டற்றது.

அநுபலத்தி- உண்மையுடன்னு ஞானத்தின் இன்மை, ஞாநாபாவம்

அநுமாபகம் அநுமேயத்தை யுணர்த்துவது அநுமிக்கப்பண்ணுவது, அறிவிப்பது.

அநுமாநம்-கருதல்

அநுமிதி இலிங்கத்தின் பராமரிசத்தாற்றோன்றுமறிவு, கருதலறி

அநுவிருத்தி தொடர்ச்சி, சேர்ந்திருத்தல்.

அநேகாநுகதம்- பல்வற்

றி னொருங்குசேறலையு
டயது
அநைகாந்திகம் பிறழ்வு
டையது நியமமில்லது
அப்பியத்துவம்-சிறுமை
கொஞ்சம்
அப்பிரதிமை தோற்ற
மை
அப்பிராமாண்யம்-அப்பி
ரமாத்துவம்.
அபதிட்டம்--மறுக்கப்ப
டுதல்,பழி கப்படுதல்
அபரத்துவம்-பின் ம
அப ர்க்கம்-மோட்சம்
அபாகசம் பாகத்தாலு
ண்டாகாதது இயற்
க
அபிதேயம்-பெயரிட்டுவெ
ழ கற்பாலது.
அபியுபகமம் மெய்யெ
ருத்துக்கொள்ளு
தல்.
அபிவியஞ்சகம் தெரிவி
த்த தோற்றுவித்த
ல், வெளிப்படுத்தல்
அயதார்த்தம்.பொய்
அவதார ம் நிச்சயித்த
ல்
அ திதம் டிக் ப்ப
டாதது

அவாதிதவி.யம் அநு
மானவாக்கியத்திற்சொ
ல்லப்படும் பஞ்சரூப
களுளொன்று அஃது
ஏதுவுக்கு வி யமான
சாத்தியதருமம் எப்பி
ரமாணத்தானுங் கண்
டிக்கப்படாதிருத்தல்
அவாந்தரவியாபாரம்- இ
டைத்தொழில்
அவிசம்பாதம்- பிரமாண
த்தையநுசரித்தது
ஆ.பசு.
ஆசிரயம்- பற்றுக்கோடு
இருப்பிடம், பக் ம்
ஆசிரயாசித்தம் சார்ப சி
த்தம்
ஆலோகம் ஒளி
இந்திரியம் பொறி, ஆன்
மாவின டயாளம்
இ க் ணம்-சிறப்பியல்பு
அ டயாளம்
இலக்கியம் - இலக்கணமு
டயது
இலிங் ம் வியாத்தி வி
பால் ம றந்த பொரு
ளை உ ர்த்துவது வி
யாப்பியமா து.(குறி
சாதனம் ஏது என்ப
னபரியாயம்)

உபசீவகம் அணைந்திருப்பது
உபசீவிபம்- அணைதல்
உபமிதி உபமா ப் பிரமாணத்தினால் வருமறிவு.
உபலப்தி அடைதல், அறிவு, புலனாலறிதல்
உபாதி-சாத்தியத்திற் சமவியாத்தியுடையதாய்ச் சாதநத்தில் வியாபகமில்லாதது, செயற்கையானது
உயர்சிறப்படைதல்-வீடடைதல்
உற்பூதவுருவப் பிரத்தியட்சமாய்க் காணப்பட்டவடிவம்.
ஏத்துவாபாசம் ஏதுப்போலி.
ஏத்வந்தரம் வேறேரேது
ஏது சமர்த்தப்பிரவிருத்திசாந ம்- பயனுடைச்செலவைத் தோற்றுவித்தல் (ஏது- ாரணம் சமர்த்தம் கொடுத்தல் பிரவிருத்தி செவு சாந ம்-தோற்றுவித் ல்)
ஒப்புத்திருஷ்டம்- ஒப்புமைகாண்டல்
ஔபாதிகம் உபாதியாலுண்டாயது.
டம்-குடம்
கணிகம் கணமாத்திரத்திலிருப்பது
தம்பமுகுளம்- டப்பமொட்டு
கபாலமாலா-ஓட்டின்ரிசை
மகம்-அடைவது, பெறுதி
ரணம் உயர்ந்த காரணம்
ாலாத்தியயம் இறந்தகாலம்
கிருத த்துவம்-செய்யப்படுகை.
சங்கியா-எண்
சங்கே தம் நியமம்
சத்து-உள்ளது
சத்துவம்-உ ம
சத்தை-உண்மை, உண்மைத் தன் மையாகிய சாதி
சந்நிகர்ஷம்-சம்பந்தம்
சமவாயம் ஒற்று ம, இயபு

சமவாயி- முதற்காரணம்
சமவேதம்-பிரியா ம, நீக்கமின்மை.
சமவேதித்தல்- நீக்கமின்றியிருத்தல், பிரியாதிருத்தல்
சமுசர்க்கம்-கலப்பு.
சலம்- ஒரு கருத்துப்பற்றிக்கூறிய மொழிக்கு வேறு பொருள்படைத்திட்டுக்கொண்டு பழித்தல்.
ச 'கற்பம் - விகற்பமுளது
சற்பாவம்- 'ரமை
சற்பிரதிபக்கம்-உள்ளவிரோதியுடையது
சாட்சாத்-பிரத்தியட்சம்
சாத்தியம்- முடிக்கப்படுவது.
சாதகதமம்-உயர்ந்த சாதகம்
சாத ம்-காரணம்
சாதநம் முடிப்பது
சாதீயத்துவம்-சாதியின் சம்பந்தத்தன்மை
சாமாநியம் பொது
சான்மகம் - ஆன்மாவின் கூட்டமுடையது ஆன்மாவோடுகூடியது.
சிநேகம்-திரட்டுதல்
சுரோத்திரம்-காது
சு பார்த்தம்-தற்பொருட்டு.
சையுத்தம் - சயோகசம்பந்தத்தால்விருத்தியாயது
சையோகம்-புணர்ச்சி.
சொரூபம்-ஏது, இலக்கணம்
சொரூபாசித்தம்- ஏதுவசித்தம்
சோபாதிகதை உபாதியோடுகூடியதன்மை.
ஞாதத்வம்- அறியுந்தன்மை, அறியப்படுந் த ன்மை.
ஞாததை-அறிகை, அறியப்படுகை
தத்துவஞாநம் - மெய்ஞ்ஞாநம்.
தருமம்-தொழில், தன்மை
தாடி-மாட்டின்கழுத்திற்புடைத்துத்தூ 'குந்தசை.
தாதாத்மியம்-ஒற்று ம
தாரை - இடையீடுபடாம
திதித்தாபகம்-இருந்த

போலிருத்துதல்,-நிலை பெறுத்துதை
நவியம் மழு
நவீநம்-புதுமை
நிக்ஙிர த்தாநம் - தோல் பித்தாநம்
நிச்சிதம்-நிச்சயிக்கப்பட்டது
நிச்சிம்ரயசம்- மோட்சம்
நிஷித்தத்வம் - விலக்கப் படுந்தன் ம
நிஷேதம்-எதிர்மறை
நிண்ணயம்-நிச்சயம்.
நியதம்-நியதி, நியமம்.
நமித்திகம் நிமித்தத் தாலாயது
படலம்-கூட்டம்
பதம் பொருள்
பராமரிசம்-ஆராய்ச்சி
பரார்த்தம் பிறன்பொருட்டு.
பரிச்சிந்நம் - தள்ளப்படுவது
பரி தி-பரிணமம்
பரிணமம்-உருத்திரிதல்
பரிமாணம்-அளவு
பா சம் பாசத்தாலுண்டாயது, செயற்கை.
பாஷியகாரர்-உரைகாரர்
பாதிதம் தடு ப்பட்டது, மறுப்புடையது
பாரிமாண்டலியம்-மிகப் பெரியஅளவு
பிரசயம்-ஐது.
பிரசிதிலம்-மி ஐது.
பிரத்தியபிஞாநம்-குறி, தறிந்த ஞாநம், நேரேயறிதல்
பிரதரிசநம்-காணுதல்
பிரதரிசித்தல்- ாண்பித்தல், சொல்லுதல்
பிரதிபாதித்தல் - சொல்லுதல்
பிரதியோகி-எதிர்ம ற
பிரதீதி-அறிவு.
பிரமம்-மயக்கம்
பிரமாணம்- அள வ அளவைக் கருவி
பிரமாதா-அளப்பவன்
பிரமாதுரு-பிரமாதா
பிரமேயம்-அளவையான ளக்கற்பாலது, அளகப்படுவது.
பிரமை-யதார்த், வநுபவம், அளத்தல்
பிரயுத்தம்- பிரயோகிக்ப்பட்டது, கூட்டப்பட்டது
பிரயோசகம் காரணம்
பிரவர்த்தித்தல் மேற்

